உ

சிவ சிவ

# ‘ஸ்ரீ குமரகுருபரர்’

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

**ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார ஸ்வாமித் தம்பிரான் ஸ்வாமிகள் அவர்கள்**

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில்:

கொன்றை மாலை சூட்டி
சண்டேசப்பதம் அருளுதல்

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 3] ஐப்பசி [பகுதி 1

## வெள்ளி இதழ்

இது ஸ்ரீகுமரகுருபரரின் இருபத்தைந்தாவது இதழ்; வெள்ளி இதழ்! வெள்ளியம்பலத் தாடும் வேந்தன் திருவிளையாடல்களை விளக்கும் திருவிளையாடற் புராண உரைநடை கூடற்காண்டம் இந்த இதழிலிருந்து தொடங்குகிறது. இதனாலும் இது வெள்ளி இதழ்தான்!

பண்டார மும்மணிக்கோவையின் 11ஆம் பாடலில் குருநாதரை உழவராக வருணிக்கிறார் ஸ்ரீ குமர குருபர சுவாமிகள். அப்பாடல் மிகச்செறிவான பாடல். எனவே முன்னுரையாக, குருநாதரை உழவர் என்றதன் பொதுப் பொருத்தங்களை உழவின் காரியங்களைப் பற்றி ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் அருள்பழுத்த கனிச்சுவைப் பகுதியில் விளக்கியருளியுள்ளார்கள்.

வெளிவராத இலக்கியங்களை வெளியிடும் பகுதியில் வெளி வந்து கொண்டிருந்த களந்தை தத்திசுவரர் பதிற்றுப்பத்தந்தாதி இந்த இதழுடன் நிறைவு பெறுகிறது.

ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் அருளிய முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழ் நூலில் உள்ள சாஸ்திரக் கருத்துக்களை மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் தொடர்ந்து விளக்கியெழுத உள்ளார்கள்: முதற் கட்டுரை இந்த இதழில் வெளிவந்துள்ளது.

திருக்கோயில் ஆசிரியர் திரு. ந. ரா. முருகவேள் அவர்களின் 'மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்' என்ற ஆய்வுக் கட்டுரையும், திரு. கி. வா. ஜ. அவர்களின் 'அஞ்சேல்' என்ற திருவாரூர் நான்மணிமாலைப் பாடல் விளக்கக் கட்டுரையும், டாக்டர் திரு. சித்தலிங்கையா அவர்களின் 'விழிகள் கண்டன' என்ற கட்டுரையின் தொடர்ச்சிப் பகுதியும் திரு. ம. சிவசம்பு அவர்களின் 'சிரிப்பும் சிவபெருமானும்' என்ற கட்டுரையும், திருமதி. V. சுந்தரி விசுவநாதன் அவர்களின் 'உண்மை புரிந்தது' சிறுகதையும் தொடர்ந்து வரும் அங்கங்களும் இதழுக்கு அணி செய்கின்றன.

இந்த இதழில் விடையரங்கப் பகுதி இல்லை. அடுத்த இதழில் வரும். அதற்கான வினா அடுகில் உள்ளது. வாசகர்களின் விடைகளுள் சிறந்தவையும் வெளியிடப் பெறும்.

... நி. ஆ-ர்.

---

திருஞானசம்பந்த சுவாமிகள் நின்றசீர் நெடுமாறனின் உத்தரவைத் தடுக்காதது ஏன்? சேக்கிழாரின் காரணத்தோடு சிந்தனையை நிறுத்தினால் போதுமா? தீ வைப்புக்கு இவ்வளவு பெரிய தண்டனையா?

## புத்தக விற்பனையாளர்களுக்கும், அன்பர்கட்கும்

## ஒரு நற்செய்தி!

ஸ்ரீ காசிமடம் பல அறக்கட்டளைகள் நிறுவிப் பல நூல்களை வெளியிட்டு வருவது அனைவரும் அறிந்ததே. அறக்கட்டளைகள் இல்லாமலும் ஸ்ரீ காசிமடம் வெளியீடுகள் பலசெய்து வருவதையும் அன்பர்கள் அறிவார்கள். அவற்றை இப்படி வகைப்படுத்தலாம்.

பன்னிரு திருமுறைப் பதிப்புக்கள், திருக்குறட் பதிப்புக்கள்,
சாஸ்திர நூற்பதிப்புக்கள், உரைநடையில் சமயவிளக்கநூல்கள்
தொகுப்பு நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள்

இவ்வகையான நூல்கள் இலட்ச ரூபாய்க்கு மேற்பட்ட அளவில் விற்பனைக்குத் தயாராக உள்ளன. திருக்குறள் மறு பதிப்புக்கள் தொடங்கப் பெறவுள்ளன.

அனைத்தும் அடக்க விலைப் பதிப்புக்கள்; குறைந்த விலைப் பதிப்புக்கள்!

இவற்றைப் பெற்று விற்பனை செய்ய விரும்பும் விற்பனையாளர்களுக்கு இதுநாள் வரையிலும் இருந்த சில செளகர்யக் குறைவுகளை நிவர்த்தி செய்து ஸ்ரீகாசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் சில நலம்பயக்கும் சலுகைகளை அறிவித்தருளியுள்ளார்கள்.

**சலுகைகள் :**

1. ஸ்ரீ காசிமடம் வெளியீடுகள் ரூ. 50/-க்கு மேல் பெறும் விற்பனையாளர்கள் அன்பர்கட்கு 20% கழிவு உண்டு.

[இதுவரை 20 பிரதிகட்குமேல் பெறுவோருக்கு கழிவு என்று இருந்த விதி தளர்த்தப்பெற்றது]

2. ரூ. 1000/-க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச் செலவு இலவசம்.

3. ஆவண ஒப்பந்தங்களின்பேரில் தக்க கம்பெனிகட்கு ரூ. 5000/– வரை (மூன்றுமாத காலத்திற்குள் திருப்பிச் செலுத்துமாறு) நூல்கள் கடனாக வழங்கப்பெறலாம்.

4. ஸ்ரீ காசிமடம் புதிய வெளியீட்டு எண் வரிசையில் உள்ள நூல்களில் ஆண்டொன்றுக்கு ரூ. 1000/–க்குமேல் பெறும் விற்பனையாளர்களுக்கு 5% விற்பனைக் கழிவு அதிகமாக வழங்கப்பெறும்.

**வேண்டுகோள் :-**

அன்புகூர்ந்து நூல்களைப்பெற, கீழ்க்கண்ட முகவரியில் தொடர்பு கொள்ள வேண்டுகிறேன். ... நி. ஆ-ர்.

முகவரி :- நிர்வாக ஆசிரியர்,
**ஸ்ரீ குமரகுருபரர்,**
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் 612 504
(தென் இந்தியா)

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்



# அருள் பழுத்த கனிச்சுவை

குருநாதராகிய ஸ்ரீ மாசிலாமணியை ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் 'உழவனுகி மாநிலம் புரக்கும் மாசிலாமணி' என்று வருணிக்கிருர். இந்த வருணனை செறிந்த 'முற்படு மாயை' எனத் தொடங்கும் ஆசிரியப்பாப் பாடலில் சைவ சித்தாந்தக் கருத்துக்கள் நிறைந்து ததும்புகின்றன. அந்தக் கருத்துக்களைச் சுவையாக ஒரு கதை கேட்கின்ற மனோ பாவத்தை நமக்கு ஏற்படுத்திச் சொல்லும் பாங்கை நாம் வியந்து அனுபவிக்க வேண்டும்.

உழவுத் தொழில் செய்வது என்பது சாமான்யமான காரியமன்று. விளைச்சல் வீட்டுக்கு வந்து சேருவதற்குள் உழவன்படும்பாடு அளவிடமுடியாது. அவ்வளவு பாடு பட்டும் விளைச்சல் சரியாக இல்லை என்ருல் உழவன் மனம் என்ன பாடுபடும்!

தொழிலுக்குத்தக்கபடி மூலங்களும் கருவிகளும் தேவைப் படும். சில தொழில்களுக்கு அதிகக் கருவிகள் தேவைப் படாது. உழவுத் தொழில்தான் அதிக மூலங்களும் கருவி களும் தேவையான தொழிலாகும். இந்தக்கருத்தையெல் லாம் உட்கொண்டுதான் உழுவாரை உலகத்தார்க்கு ஆணி என்ருர் தெய்வப் புலமைத் திருவள்ளுவனர். உணவுதரும் தொழில் என்பதனல் மட்டும் உழவுக்குச் சிறப்பில்லை. முயற்சி அதிகம் வேண்டுவது என்பதனுலும் அத்தொழில் தனிச் சிறப்பைப் பெறுகிறது.

உவமையோ உருவகமோ சொன்னல் உயர்ந்த பொருளாகச் சொல்ல வேண்டும். ஒருவரின் முக ஒளிக்கு ஒப்புமை சொல்ல வேண்டுமென்ருல் 'கோடி சூர்யப் பிரகாசம் என்று சொன்னல்தான் அழகாக இருக்கும்; மின்மினி போன்ற பிரகாசம் என்று சொன்னல் சொன்னவனுக்குக் கவித்துவம் இல்லை என்று உறுதியாகிவிடும்.

கடவுளினும் வேறற்றவராகிய ஸ்ரீ மாசிலாமணி தேசிகரை, ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உழவர் என்று உருவகப் படுத்துகிருர். தொழில்களில் சிறந்தது 'உழவு' என்பதனுல் இது மிகச் சிறந்த ஒப்புமை ஆகிறது.

சாமான்யமான சிந்தனை உள்ளவர்களெல்லாம் 'குருஸ்தானம்' என்பது சுலபமானது என்று கருதுவார்கள். எல்லாரையும் ஒப்பநோக்கியும் தக்கபடி அருள்பாலித்தும், துய்ப்பித்தும் கடைத்தேற்ற வேண்டிய பெரும் கடமை குருவுக்கு உண்டு. எனவேதான் சிரமமான தொழிலாகிய உழவு என்னும் தொழில் குருத்துவத்திற்கு ஒப்பாகிறது.

உழவுத் தொழில் செய்ய முதலாவதாக நிலம் வேண்டும். பின்னர் நீர் வேண்டும்; விதை வேண்டும்; எரு வேண்டும்-இது ஒரு பட்டியல். இது யாரும் எளிமையாகச் சொல்லக் கூடியது.

ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் அவர்கள் முதலில் உலகம் வேண்டும் என்று அருளுகிருர்கள். மூன்று உலகங்களில் ஒன்று மண்ணுலகம். அதன்பின்னர் நீர் பாய்வதற்கேற்ற வாய்க்கால் அதாவது கண்ணுறு வேண்டும் என்கிருர்கள். அதற்குப் பிறகு வயல்கள் வேண்டும் என்று அருளுகிருர்கள். அதற்கும் பிறகு விதையைச் சொல்கிருர்கள்.

உழவுத் தொழிலின் தொடக்கம் வயலில் இல்லை. ஆற்றில்தான் இந்தத் தொழில் தொடங்குகிறது. மதகுகளைத் திறந்து ஆற்று நீரை வாய்க்காலுக்குச் செலுத்த

வேண்டும். அதன் பிறகு மடைதிறந்து நீரை வயலுக்குப் பாய்ச்ச வேண்டும். இந்த இந்தப் பருவத்தில் இன்னின்ன செயல்கள் செய்தால்தான் பயிர் செழிக்கும் என்ற வரையறைகளெல்லாம் உள்ளன. பருவம் பார்த்து அவற்றையெல்லாம் தவிராமலும் - தவருமலும் செய்யவேண்டும்.

அடுத்து இன்னுமொரு வேலே. உழவுத் தொழில் தொடங்கும் போதே இதைச் செய்ய வேண்டும். ஆண்டு முழுவதற்கும் ஏரியிலேயோ குளத்திலேயோ நீரைச்சேமித்துக் கொள்ள வேண்டும். இதுவும் உழவுடன் முற்றிலும் தொடர்புடைய காரியம்தான்.

இந்தச் செய்திகளே எல்லாம் ஒருமுறைக்கு இருமுறை படித்துப் பாருங்கள். இதேபோன்ற காரியங்களேக் குருநாதரும் செய்கிருர். அவ்விளக்கங்களே அடுத்த இதழிலிருந்து காண்போம்.

— சிவ சிவ

---

உ

சிவ சிவ

**காஞ்சீபுரத்தில்**

## கந்தபுராணச் சொற்பொழிவுகள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் அதிபர்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**

அருளாணேயின் வண்ணம் நிகழ்த்தப்பெறுவது

ரௌத்திரி ஆண்டு ஐப்பசி 23உ முதல் 28உ முடிய (8–11–80-13–11–-80) ஆறு நாட்கள். நாடோறும் மாலே 6-30 முதல்.

இடம்: காஞ்சிபுரம் குமரகோட்டம் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில்

சொற்பொழிவாளர்: காஞ்சிபுரம் வித்துவான்

திரு. க. சம்பந்த முதலியார் அவர்கள்.

நமரங்காள் வருக!

ஸ்ரீகாசிமடம்
திருப்பனந்தாள்
10-10-80

அருளாணேயின் வண்ணம்
முத்து. மெய்கண்டதேவன்
மானேசர்

உ
சிவ சிவ

தஞ்சாவூரில்
# சிவபாதசேகரன் இராசராசசோழன் நினைவு
# இன்னிசைத் திருமுறை விழா

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து அதிபர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்**
அவர்களின் அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

ரௌத்ரி ஆண்டு ஐப்பசித் திங்கள் 4-ஆம் நாள்
20—10—80 ஐப்பசிச் சதயம் – திங்கட்கிழமை

தஞ்சாவூரில் தஞ்சைப் பெருவுடையார் சந்நிதியில்
இரவு 9-மணிதகுத் தொடங்கிப்பிரகதீசுவரர் வலம்வரும் திருவீதி களில் இரவு முழுவதும் இன்னிசைத் திருமுறைபாடி காலை 6 மணிக்குத் தஞ்சைப் பெருவுடையார் சந்நிதியில் நிறைவு செய்யப்பெறும்.

திருமுறை வாணர்கள்:

1. சங்கீத பூஷணம், கலைமாமணி
   தருமபுரம் திரு. P. சுவாமிநாத முதலியார், சென்னை.
2. இன்னிசைப் பண்மணிகள்
   திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்.
3. தேவார இசைமணி
   திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்,
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சிராப்பள்ளி.
4. இசைநம்பி திரு. S. கல்யாணசுந்தர தேசிகர்,
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், கும்பகோணம்.
5. திரு. T. R. கிருஷ்ணன், பிடில், கும்பகோணம்.
6. திரு. கோ. வேங்கடராமன், மிருதங்கம், திருப்பனந்தாள்

அருளாணையின் வண்ணம்
முத்து. மெய்கண்டதேவன்
மானேசர்.

ஸ்ரீகாசிமடம்,
திருப்பனந்தாள்

உ
சிவ சிவ

திருக்கொள்ளம்பூதூரில்

# திருநெறிய தேவாரத் திருமுறை இன்னிசை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21 ஆவது அதிபர்
ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்**
**சுவாமிகள்** அவர்களின்
அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

ரௌத்திரி ஆண்டு ஐப்பசித் திங்கள் 22 ஆம் நாள் (7—11—80) வெள்ளிக்கிழமை மாலை 6 மணி அளவில்

திருமுறைவாணர்கள்:-

1. இன்னிசைப் பண்மணிகள்,
திரு. T. M. விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்,
திருவாவடுதுறை.
2. தேவார இசைமணி,
திரு. S. முத்துக்கந்தசாமி தேசிகர்,
ஸ்ரீகாசிமடம் கட்டளை ஓதுவார், திருச்சிராப்பள்ளி
3. இசைநம்பி,
திரு. S. கல்யாணசுந்தர தேசிகர்,
ஸ்ரீகாசிமடம் கட்டளை ஓதுவார், கும்பகோணம்.
4. தேவார சங்கீத பூஷணம்,
திரு. தி. சா. தண்டபாணி, ஸ்ரீகம்பகரேஸ்வர சுவாமி
தேவஸ்தான ஓதுவார், திருபுவனம்.
5. திரு. T. R. கிருஷ்ணன், — பிடில் - கும்பகோணம்.
6. திரு. கோ. வேங்கடராமன், — மிருதங்கம்
திருப்பனந்தாள்.

S. K. மீனாட்சிசுந்தரம்,
நிர்வாக அதிகாரி
ஸ்ரீ வில்வாரண்யேசுவரசுவாமி
தேவஸ்தானம்
திருக்கொள்ளம்பூதூர்

அருளாணையின் வண்ணம்,
முத்து. மெய்கண்டதேவன்
மானேசர், ஸ்ரீகாசிமடம்,
திருப்பனந்தாள்.

உ

சிவ சிவ

# மதுரையில்

# கந்தபுராணச் சொற்பொழிவுகள்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்கள் அருளாணையின் வண்ணம் நிகழ்த்தப் பெறுவது.

ரௌத்திரி ஆண்டு ஐப்பசி 23உ முதல் 28உ முடிய (8-11-80–13-11-80) ஆறு நாட்கள். நாடோறும் மாலை 6-30 முதல்.

இடம்: தருமையாதீனத்திற்குச் சொந்தமான ஸ்ரீ குருஞான சம்பந்தர் திருமடம், வடக்கு மாசி வீதி, மதுரை.

சொற்பொழிவாளர்: துறைசை ஆதீன வித்துவான், காஞ்சிபுரம்

திரு. க. வச்சிரவேல் முதலியார் B. A., B. T. அவர்கள்

நமரங்காள் வருக!

ஸ்ரீ காசிமடம்
திருப்பனந்தாள்
10-10-80

அருளாணையின் வண்ணம்,
முத்து. மெய்கண்டதேவன்
மானேசர்,

---

## 25-நான்கு சாஸ்வதமான லக்ஷயப் பொருள்கள் (models)

தமிழாக்கம்: கோ. வன்மீகநாதன்

விண்ணும் மண்ணும் உண்டாகிய காலத்திற்கு முன்
மேகம் போன்ற பொருள் ஒன்று இருந்தது;
மௌனமாய், மற்றெல்லாவற்றினின்றும்
பிரித்து ஒதுக்கிவைக்கப்பட்டதாய்,
தனித்து நின்றதாய், மாருததாய்,
சாஸ்வதமாக, ஓயாமல் சுழன்று கொண்டிருப்பதாய்,
எல்லாப் பொருள்களுக்கும் தாயாக இருக்கத்
தகுதியுள்ளதாய் (ஒன்று இருந்தது)

அதன் பெயர் எனக்குத் தெரியாது.
அதனை நான் டௌ என்று விளிக்கின்றேன்.
அதற்கு ஒரு பெயர் கொடுக்கும்படி நிர்பந்தம் செய்யப்பட்டால்
அதை நான் 'பெரியது' என்று அழைப்பேன்.
பெரியதாக இருக்கிறதென்றால் பெருவெளியில் எங்கும் எட்டும்
பொருள் என்ற அர்த்தம் அச்சொல்லில்
பொதிந்திருக்கும்,
பெருவெளியில் எட்டுவதென்றால் தொலைவு வரையில் எட்டுதல்
என்று பொருள்படும்,
தொலைவுவரையில் எட்டுதல் என்றால் முன்னிருந்த இடத்திற்குத்
திரும்புதல் என்று பொருள்படும்.
ஆகையால் டௌ பெரிதாயிருக்கிறது,
விண் பெரிதாயிருக்கிறது,
மண் பெரிதாயிருக்கிறது,
மன்னனும் பெரியவனாயிருக்கின்றான்.
மனிதன் மண்ணைப்பார்த்து (அதைப்போலத்) தன்னை உருவாக்கிக்
கொள்கிறான்;

மண் விண்ணைப் பார்த்துத் தன்னை உருவாக்கிக் கொள்ளுகிறது;
விண் டௌவைப் பார்த்துத் தன்னை உருவாக்கிக் கொள்ளுகிறது;
டௌ இயற்கையைப் பார்த்துத் தன்னை உருவாக்கிக்
கொள்ளுகிறது;

---

1. குறிப்பு:- சீன மொழியில் 'ஸி-ஜன்' என்ற சொல்லுக்கு, 'தானே அவ்வண்ணமிருத்தல்' 'சுயம்பூ' என்று பொருள். டௌ பரப்பிரம்மம் என்று முன்னமே விளக்கப்பட்டது, ஆகையால் டௌ வேறல்ல, இயற்கை வேறல்ல.

உ

சிவமயம்

# சிதம்பரச் செய்யுட்கோவை

## A String of Verses on Chidambaram

By Kumaragurupara Swamigal

Translated into English by K. M. Venkataramiah.

தரவு

65. குழைதூங்கு கழைமென்தோள் கோமாரி கொலைக் கண்கள்
இழைதூங்கு முலைக்கண்வைத் தேயெய்தா நாணெய்த
உழைதூங்கு குயிலேங்க உருமுத்தீ உகநக்கு
மழைதூங்கு பொழில்தில்லை மணிமன்றுள் நடஞ்செய்வோய்,

Wearing earrings, with bamboo like shoulders,
Kali, with killing eyes directed toward her nipple,
Feels shy;
The cuckoo seated beside fears;
The thunderbolt thunders;
rejoicing
You dance in the beautiful Hall at Thillai
— surrounded by groves covered with clouds.

2. மீனேற்றின் துவசத்தான் தனிதுஞ்ச விழித்தோய்நின்
ஆனேற்றின் துவசமோ அடலேற்றின் ஊர்தியோ
கானேற்ற பைங்கூழின் கவளமாக் கணத்தின்கண்
வானேற்ற பகிரண்டம் வாய்மடுக்க வல்லதே.

Cupid (Manmatha), having the fish as the emblem of his banner
To perish,
Oh Lord! You stared at him;
The Bull which is the emblem of Your banner
And the Bull which You ride –

In the Lord which graze on tender crops
in the forest,
Which has the capacity to devour,
The outer — spaces of the Universe?
எனவாங்கு — So saying

பைந்துழாய் மவுலிப் பண்ணவன்உவப்ப
அந்தணர் பழிச்சவும் அறத்தின் புங்கவன்
முனியான் முனிவன் போலும்
அனைய தன்றே ஆன்றோர் கடனே.

Vishnu having the crown of துழாய் rejoice,
And the Brahmans to adore
The God of virtue though without anger,
May perhaps be wrathful;
Even to be so is not expected of the wise.

# நூல் நிறை

## மேல்மருவத்தூரில் அற்புதம்

[ஆசிரியர் "தொண்டன்" பக்சம் 24+230 விலைரு 5 பிளாஸ் டிக்ராப்பருடன் ரூ 6. வெளியிடு, கிடைக்குமிடம்: ஆதிபராசக்திகல்வி மருத்துவப் பண்பாட்டு அறநிலை, மேல் மருவத்தூர் அ. கு. எண் 603 301 செங்கற்பட்டு மாவட்டம்]

இது ஒரு ஞானநூல்; ஆனால் நாவல் படிப்பதுபோல் ஓர் இன்பத்தை அளிக்கிறது. இது ஒரு வரலாற்றுநூல்; ஆனால் புராணம் படிப்பதுபோல் பக்தியையும் கொடுக்கிறது.

இந்நூலின் முகவுரையுள் அமரர் குருதேவர் தெ. பொ. மீ அவர்கள் 'ஆதிபராசக்தி நிலையங்கள் வெறும் கோயில்கள் அல்ல; மக்களை உயர்த்துகின்ற பாத்திகள்' என்று குறிப்பிட்டுள்ள தொடரின் வரலாற்று ஆதாரங்கள் வியாக்கியான்னங்களே இந்த இனிய எளிய வசனநூல்.

அன்னையை வழிபட்டு வரம்பெற்று நலம் பெற்றவர்களின் மேன்மைகளைக் கூறி நம்மையும் ஈர்ப்பதனால் இது வசனத்தில் அமைந்த அன்னை ஆற்றுப்படை. நம் விசனத்தைத் தவிர்க்கும் வெற்றிக்கவசம்!

அனைவரின் இல்லத்திலும் இதயத்திலும் அவசியம் இருக்க வேண்டிய நூல்.

## வேதம் பிறந்தது

[ஆசிரியர்: திரு. கே. ஆர். வாசுதேவன் எம். ஏ., பக்கம் 8+71; விலை ரூ. 3-25 வெளியிடு: கிரி டிரேடிங் ஏஜன்சி சென்னை - 4. கிடைக்குமிடங்கள்: கிரி டிரேடிங் ஏஜன்சி, 10, சபாலிசுவரர் சன்னதித் தெரு, மயிலாப்பூர், சென்னை 600 004; மோதி நிவாஸ், தபால் அலுவலகம் எதிரில், மாதுங்கா, பம்பாய் 400019]

கிரி டிரேடிங் ஏஜன்சி நிறுவனத்தார் பக்தி நூல்களை வெளியிடும் பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு பல அரிய பணிகள் செய்து வருகின்றனர். வேதம் பிறந்தது என்னும் இந் நூல் ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் வரலாற்றையும், அந்தமரபில் இலங்கும் துறவரசர்கள் வரலாற்றையும் சுருக்கமாகச் சொல்லும் நூலாகும். வேதம் பிறந்த மண்ணில் வேதம் நிரித்துக் கூறப் பெற்றதையும் அந்தநெறி நலிய ஆரம்பித்ததையும் மாற்ற நிகழ்ந்த அற்புதமே ஆதிசங்கரரின் அவதாரம் என்று விளக்கப் பெற்றுள்ளது. எளிய இனிய நடையில் மிகச்சுவையாக நூலை இயற்றியுள்ள நூலாசிரியர் பாராட்டப் பெற வேண்டியவர்.

ஆத்திக விழிப்புணர்ச்சிக்கு இந் நூல் தூண்டுகோலாகும் என்பதில் ஐயமில்லை.

## சகல சௌபாக்கியம் தரும் மகாப் பிரதோஷ மகிமை

[ஆசிரியர்: நாகர்கோயில் திரு. கிருஷ்ணன், பக்கம்:72 விலை ரு. 2 வெளியீடு, பதிப்பகம், கிடைக்குமிடங்கள்: கிரி டிரேடிங் ஏஜன்சி, 10, சன்னதித் தெரு, மயிலாப்பூர் சென்னை 600 004: மோதி நிவாஸ் (தபால் நிலையம் எதிரில்) பந்தார்கர் ரோடு, மாதுங்கா, பம்பாய் 400 019]

நித்ய, பட்ச, மாத, மகா, பிரளயப் பிரதோஷங்கள் பற்றிய குறிப்புகள், பலன்கள், பிரதோஷப்பலன் பற்றி உணரச் சாண்டில்ய முனிவர் சொன்ன தர்மகுப்தன் கதை, அட்டவீரட்டானத்தலங்கள் பஞ்சபூதத் தலங்கள் பற்றிய குறிப்புகள், பிரதோஷபூஜை முறைகள் மந்திரங்கள் ஆகியன அடங்கிய நூல். பின்பற்றுவதற்கு உரியநூல்.

# உண்மை புரிந்தது

— வி. சுந்தரி விசுவநாதன். —

பிரபு! தாங்கள் ஏன் நகைத்துக் கொண்டு இருக்கிறீர்கள்? பார்வதிதேவி, சிவபெருமானிடம் இக்கேள்வியைத் தொடுத்தார். ஓ! அதுவா! "இந்த உயிரினங்களை நினைத்தேன்சிரிப்புவந்துவிட்டது"

'ஓ!உயிரினங்கள்மீதுதங்களுக்கு அத்தனை இளக்காறமா?''

'தேவியார் சற்று கோபமாகவே கேட்டார்.'

'அல்ல! தேவி, அல்ல! உயிரினங்களின் 'வக்கிர எண்ணங்களை' மட்டும் வெறுப்பவன் நான்.'

"தாங்கள் என் கேள்விக்குப் பதிலளிக்காமல் நழுவப் பார்க்கிறீர்கள்!''

"நிச்சயமாக அப்படி இல்லை! வேண்டுமானால், இன்று பூவுலகைச் சுற்றி உலா வரும்போது, சான்றுடன் இதை நிருபித்துக் காட்டுகிறேன்.''

''சரி!அப்படியேசெய்யுங்கள்!''

ஊர் ஒதுப்புறம். ஆண்டவன், தன் 'கருணை' யாகிய பசுமையை அந்த வேப்பமரத்தில் நன்கு பாய் விரித்தோடி இருந்தான். அதன் நிழலில்-உலர்ந்து உதிர்ந்த இலைகள்; பூக்கள்-காகங்கள் தின்று உமிழ்ந்த கொட்டைகள்; தோல்கள்-வேர் முண்டில், ஓர் 'எறும்பு' தவம் இடுந்து கொண்டிருந்தது.

புவித்தேவியை, வலம் வருகையில், சிவபெருமானும், தேவியாரும், இந்த இடத்தில் சிறிது நேரம் நிற்கின்றனர்.

பிரபு! ''இத்தனைச் சிறிய உயிர் தங்களை நோக்கித் தவம் இருப்பதால், அது கேட்கும் வரத்தை அளித்து விடுங்கள்.''

''பொறு தேவி, பொறு! கேட்கும் வரத்தின் தன்மைக்கு ஏற்ற வாறு அளிப்பதில்தான் நமக்குப் பெருமை!''

பிரபு! ''சிறிய உயிர் என்பதால் அதன்மீது அப்படியொரு இரக்கம்!''

தேவி! உயிரினம் சிறிதா? பெரிதா? என்பதைக் கணக்கிடக் கூடாது! அதன், 'உள்ளம்' பெரிதா, சிறிதா? என்பதைத் தான் கணக்கில் எடுக்கவேண்டும்.

பிரபு! மிகச் சரியாக விளக்கம் அளித்தமைக்கு நன்றி!

எறும்பே! ''நின் தவத்திற்கு மெச்சினேம்! யாது வரம் வேண்டும்? இயம்பு!''

''எனது குறையைப் போக்க வந்த பிரபுவே, வணக்கம்! யான்

வேண்டும் வரத்தை உரைத்திட லாமோ"

"அப்படியே ஆகட்டும்!''

பிரபு! ''உயிரினங்களின் உரு வத்தில், நாங்கள் மிகச்சிறியதாக இருப்பதால், மற்றவர்கள் எங் களை 'அற்பர்' களாகக் கருது கின்றனர். அப்படி நினைப்பவர் களை".........

''உம்...... ஏன் தயக்கம்! சொல்!''......

''அப்படி நினைப்பவர்களை, நாங் கள் 'கடித்தால்', அவர்கள் உடனே இறக்கவேண்டும்! இது தான் எமது 'வரம்' பிரபு!

(சிவபெருமான் அர்த்தபுஷ்டி யுடன் தேவியாரைநோக்கிவிட்டு) எறும்பே! "நீ கேட்ட வரத்தை அளித்தோம்! ஆனால், அதில் ஒரு சிறு மாற்றம்! நீ, மற்றவர்களைக் கடித்துவிட்டு இறக்கக்கடவாய்!''

(சிறிய உயிரினமான எறும்பு கடித்தால், அது ஏன் இறக்க நேரிடுகிறது என்பதை தேவியார் இப்பொழுது நன்றாக உணர்ந்து கொண்டார்.)

# நம்பிக்கையின் பயன்

''திருவெம்பாவை, திருப்பாவை இலக்கியங்களில் நீராட்டல் என்பது ஒன்று. நீராட்டல் என்றால் ஆறு அல்லது குளங்களுக்குப் போய்க் குளித்துவிட்டு வருவது அல்ல. நம் உள்ளத்திலே இருக்கிற மலங்களா கிய அழுக்குக் கழுவப்பெற வேண்டும். உடம்பிலே அழுக்குச் சேர்ந் தால் நாம் குளிக்கிறோம். குளித்தவுடனே நாம் அழுக்கு நீங்கப் பெற்றுப் புத்துணர்ச்சி பெறுகிறோம். அதேபோல மனதிலே சேரும் அழுக்கைப் போக்குவதற்கு ஆண்டவனுடைய திருநாமங்களைச் சொல்ல வேண்டும். அப்படி அவருடைய திருநாமங்களைச் சொல்வ தன் மூலம் உள்ளத்திலே இருக்கிற அழுக்கைப் போக்கி ஆண்டவ னுடைய அருள் வெள்ளத்திலே குளிக்க முடியும். இந்த நோக்கிலே தான் திருவெம்பாவை - திருப்பாவை முதலிய பக்தி நூல்களில் நீரா டல் பகுதி அமைந்திருக்கிறது. அந்தப் பாடல்களைத் தினமும் பாடி இறைவன் திருநாமங்களைச் சொல்லி நல்ல கணவன்மாரைப் பெற்ற பெண்களும் நன்மையடைந்த ஆண்களும் நிறைய உண்டு. நாம் முதலில் பெரியவர்கள் சொல்வதை நம்பவேண்டும். பிறகு அதை வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டும்.''

–டெல்லி சைவப் பேரவையின் சார்பில் நடந்த ஆண்டாள் திருக் கல்யாண விழாவில் தலைமைதாங்கிய திருமதி. சௌந்திரா கைலாசம் அவர் களின் உரையிலிருந்து எழுதியவர் கரோல்பாக் எம். எஸ். பி. சண்முகம்.

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ

உ

சிவ சிவ

# கந்தபுராண படனம்

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்து 21 ஆவது அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

——※——

திருச்செந்தூர்

திருச்செந்திலாண்டவன் திருக்கோயிலில்

ரௌத்திரி ஆண்டு ஐப்பசித் திங்கள் 28 ஆம் நாள்

**13—11—1980**

சஷ்டித் திருநாள் முதல், ஓர் ஆண்டுக்காலம்

ஒவ்வொரு செவ்வாய், வெள்ளி, ஞாயிற்றுக்கிழமைகளிலும்

மாலை 6 மணி முதல் 8 மணி வரை

திருச்செந்தூர், வீரராகவபுரம், வித்துவான்

திரு. பா. சந்திரசேகரன் அவர்களால்

**கந்தபுராண படனம்**

நடைபெறும்.

நமரங்காள் வந்து கேட்டு இன்புறுவீராக!

வற்றா அருள்சேர் குமரேசன்வண் காதை தன்னைச்
சொற்றாரும் ஆராய்ந் திடுவாரும் துகளு றாமே
கற்றாரும் கற்பான் முயல்வாரும் கசிந்து கேட்கல்
உற்றாரும் வீடு நெறிப்பாலின் உறுவர் அன்றே.

அருளாணையின் வண்ணம்,

முத்து. மெய்கண்டதேவன்,

மானேசர், ஸ்ரீகாசிமடம்,

திருப்பனந்தாள்.

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ

# அஞ்சேல்!

**கி. வா. ஜகந்நாதன்**

குமரகுருபர முனிவர் தம் உயிருக்குப நெஞ்சுக்கும் நாவுக்கும் உபதேசம் செய்யப்புகுகிறார். தியாகப்பெருமானைச் சரணடைந்தவர்களுக்கு எந்த அச்சமும் இல்லை, யமன் வந்தாலும் பயப்படமாட்டார்களென்றுசொல்லுகிறார்.

முதலில் தியாகப்பெருமானைப் பற்றிச் சொல்கிறார். அவர் கமலை என்னும் திருவாரூரில் எழுந்தருளியிருக்கிறார். திருமகள் பூசித்தமையால் அதற்குக்கமலாலயம் என்ற திருநாமம் உண்டாயிற்று. அதையேச் சுருகி மரூஉமொழியாகக் கமலை என்று சொல்வார்கள்.

கமலத்தில் வாழும் திருமகள் பூசித்த திருவாரூரிலும் நிறையக் கமலங்கள் இருக்கின்றன. ஊரைச் சுற்றிப் பொய்கைகளும் அவற்றில் தாமரை மலர்களும் உள்ளன.

வாவிஅம் போருகம் சூழ்கம லேசர்.

அந்தக் கமலேசருடைய பெருமையைச் சொல்கிறார் முனிவர். அவர் திரிபுர சங்காரம் செய்யப் புகுந்தபோது திருமாலையே அம்பாகக் கொண்டார். அம்பின் வாலில் சிறகுகளைப் பொருத்தியிருப்பார்கள். அது வேகமாகப் போவதற்காகச் செய்வது அது. தியாகேசருக்கு அம்பாக வந்த திருமால் வீரச் செயல்களைச் செய்தவர். பகாசுரன் என்பவன் கொக்கு வடிவத்தோடு வந்தான். அவன் வாயைக் கிழித்துச் சங்காரம் செய்தவர் திருமால். அத்தகைய திருமாலைத் தம் அம்பாகக் கொண்டவர் தியாகேசர்.

புள் வாய்கிழித்த
தூவி அம்போர்.

காலம் நாளாக, வாரமாக, மாதமாக, ஆண்டாக, நூற்றாண்டாக, யுகமாக, சதுர்யுகமாகப் போய்க்கொண்டே இருக்கிறது. தேவர்கள், மனிதர்கள் ஆகிய சீவர்களெல்லாம் தமக்குரிய காலம் நிறைவுபெற்றவுடன் அவர்களும் போய்விடுகிறார்கள். ஒரு நாளில் தோன்றி மறையும் உயிர்களுண்டு. சில நாட்கள் வாழ்ந்து மடிவனவும் உண்டு. மனிதன் நூறாண்டு வாழலாம்; பிறகு மறைந்து போவான். இப்படியே தேவர்கள் வாழ்வுக்கும் கால வரையறை உண்டு.

ஆனால் தியாகேசர் இந்தக்கால வரையறைக்கு உட்படாதவர். அவர் காலங்கள் தந்தவர்; காலங் கடந்தவர். ஒவ்வொரு யுகத்தி லும் புதிய படைப்புகள் தோன்று கின்றன. புதிய ஜீவராசிகள் பிறக் கின்றன. அவற்றையெல்லாம் சாட்சியாகப் பார்த்துக்கொண்டு எல்லா யுகங்களிலும் நித்தியராக இருக்கிறார் தியாகப்பெருமான்.

உகந்தோறும் நின்றோர்.

அவருடைய இரண்டு திருவடி களையும் புகலாகப் புகுந்தவர் களுக்கு எந்தவித அச்சமும் இராது. மிகப் பெரியவர்களும், "யமன் வந்தால் என்ன செய் வோம்!" என்று அஞ்சுவார்கள். ஆனால் தியாகேசருடைய திருவடி யைப் பற்றினவர்களுக்கு அந்த அச்சம் உண்டாகாது.

"தியாகேசருடைய உபயசர ணாரவிந்தங்களையும் புகலாகப் பற்றிக்கொண்ட என் உயிரே, நீ அஞ்ச வேண்டாம். யமன் தன் ஆளாகிய கூற்றுவனை உயிரைக் கொண்டுவர அனுப்புவான். யம தூதன் வருவான். ஓடுவன், இவ் வுயிரைப் பிடித்துப்போக முடி யாதே என்று அஞ்சித் திரும்பி னால் மற்றொரு தூதுவன் வரு வான். இப்படி ஆயிரம் யமதூது வர் வந்தாலும், அவர்கள் வந்து போரிட முனைந்தாலும் என் உயிரே, நீ அஞ்சாதே" என்கிறார் முனிவர்.

துணைத்தாள் அடைந்த
ஆவி, அம்போர் உகந்து ஆயிரம்
கூற்று உடன்றாலும் அஞ்சேல்.

"என்னுடைய நாவே, நமக்குத் துணையாக இருந்து பாது காக்கும் அந்தத் தியாகேசருடைய திரு நாமங்களை இயம்பு".

நா இயம்பு.

'என்னுடைய நல்ல நெஞ்சமே, எனக்கு நன்மை செய்வதற்காக உள்ளாய் நீ. நீயும் அப்பெரு மானுடைய திருநாமங்களைத் தியானம் செய்'

ஒருக நன்னெஞ்சமே! அவர்
நாமங்களே.

'அவருடைய திருநாமங்களையே நாவால் சொல்லவேண்டும் பயனற்ற மற்றவற்றைச் சொல்லு வதை ஒழிக. அவருடைய திரு நாமங்களையே சிந்தித்துத் தியானிக்க வேண்டும்; மற்ற வற்றைப் பற்றிய சிந்தனையே வேண்டாம்' என்று அறிவுறுத்து கிறார்.

தியாகேசர் திருவடிகளை அடைந்தது உயிருடன் கூடிய உடம்பு. அவர் திருநாமத்தைச் சொல்வது நாக்கு. அவர் திரு நாமத்தைச் சிந்திப்பது மனம். மெய், மொழி, மனம் என்ற மூன்று கரணங்களையும் தியாகே சரிடம் ஈடுபடுத்துவதைச் சொல் கிறார்.

வாவிஅம் போருகம் சூழ்கம
லேசர், புள் வாய்கிழித்த
தூவிஅம் போர், உகந் தோறும்நின்
றோர்துணைத் தாள் அடைந்த
ஆவி! அம் போர்உகந்து ஆயிரம்
கூற்றுஉடன் றாலும், அஞ்சேல்!
நாஇயம்பு; ஓருக நன்னெஞ்ச
மே! அவர் நாமங்களே

பொய்கைகளில் தாமரைகள் சூழ்ந்திருக்கும் திருவாரூர்த் தியாகேசர், கொக்கு வடிவமாக வந்த பகன் என்பவனுடைய வாயைக் கிழித்துக் கொன்ற திருமாலைஅம்பாகக்கொண்டவர், எல்லாயுகங்களிலும் பிறர் அழிந்தாலும் தாம் அழியாமல் நிலைத்து நின்றவர்; அவருடைய இரண்டு திருவடிகளையும் பற்றுக்கோடாக அடைந்த என் உயிரே, தமக்கு இதுதான் அழகென்று எண்ணிப் போர் செய்தலைவிரும்பி ஆயிரம் யமதூதர்கள் வந்து அலைத்தாலும் நீ அஞ்சாதே; என் நாவே, அவருடைய நாமங்களையே இயம்புவாயாக; என் நல்ல நெஞ்சமே, அவருடைய நாமங்களையே தியானிப்பாயாக!

வாவி – பொய்கைகள். அம் போருக வாவி சூழும் என்று மாற்றியுரைப்பதுசிறக்கும். கமலா ஈசர் என்பன கமலேசர் என ஆயின, வடமொழி முடிவு. புள்-பறவை; இங்கே கொக்குவடிவமாக வந்த பகாசுரனைக் குறித்தது. தூவி – சிறகு; அம்பின் பின்புறத்தில் சிறகுகளை இணைத்திருப்பார்கள், வேகமாகப் போவதற்காக. துணைத்தாள் – இரண்டு திருவடிகளை; துணையாகிய தாளை என்றும் கொள்ளலாம். அடைந்த - புகலாக அடைந்த ஆவி; அண்மை விளி, அம்போர் - அழகிய போர்; போர்புரியவரும் காலதூதுவர்கள் அதுவே தமக்கு அழகு என்று எண்ணுவர். உகந்து - விரும்பி. கூற்று என்பது காலதூதுவரைக் குறித்தது. யமனுக்குக் கீழ் உள்ளவன் கூற்றுவன், 'தருமராசற்கா வந்த, கூற்றினை உதைப்பர் போலும் குறுக்கை வீரட்டனாரே'' என்பது அப்பர் தேவாரம். உடன்றாலும்-வந்து எதிர்த்தாலும். நா; அண்மைவிளி. நெஞ்சைத்தட்டிக் கொடுத்துத் தம் விருப்பப்படி செய்ய ஏவுதலின் நன்னெஞ்சமே' என்றார், அவர் நாமங்களையே நாவே இயம்புக, நெஞ்சமே ஓர்க என்று கூட்டுக; கடைநிலை வரிக்கு. இறைவனுக்குப் பல்லாயிரம் நாமங்கள் உண்டாதலின் நாமங்களே என்று பன்மையால் சொன்னார். நாமங்களே; ஏகாரம், பிரிநிலை; பிறவற்றைச் சொல்லாமல் அவற்றையே சொல்க என்றபடி.

இந்தச் செய்யுளில் நாலடிகளிலும் திரிபு வந்தது.

இது திருவாரூர் நான்மணி மாலையில் அமைந்த பதினோராவது பாடல்.

# விழிகள் கண்டன

Dr. T. B. சித்தலிங்கையா

சென்ற இதழ்த் தொடர்ச்சி

உங்கள் கையில் உள்ள படைக் கலத்தைப் பார்த்ததும் கண்ணைக் கொட்டி விழிக்கின்றவனையும் கொல்லக்கூடாது. புறமுதுகு காட்டுபவனைத் தாக்கக்கூடாது. காலில் விழுந்து வணங்குபவர்களையும் படைக்கலம் கைசோர நிற்பவர்களையும் கொல்லக் கூடாது. இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். என்று சொன்னான். இது எங்களுக்குக் கேட்டது. அந்த வழிகளை அப்படியே கடைப்பிடித்தோம். அந்த வீரர்கள் எங்களைத் தாக்கவில்லை. ஆகவே அங்கே ஓடிய இரத்த ஆற்றில் குதித்து நீந்தி ஓடி வந்தோம். உங்கள் தாலியைக் காப்பாற்றியவன் அந்த முருகன்தான். என்று கூறினான். சொல்லும் போதே அந்த வீரனின் கண்ணில் போர்க்களமும், முருகனின் தோற்றமும் தெரிந்தன. அதே போலக் கேட்டுக்கொண்டிருந்த பெண்ணின் கண்ணிலும் போர்க் களத்தில், தேர் ஏறி வில்லைக் கையிலே பிடித்து உயர்ந்து நின்ற முருகனின் கோலம் தெரிந்தது. நீர் நிறைந்த கண்களில் முருகன் தெரிந்தான். நன்றிப் பெருக்கில் மீண்டும கண்களில்நீர்நிறைந்தது.

இவ்வாறு அவுணர் குலப்பெண்களுக்கு, அவர்கள் இருந்த இடத்திலேயே கண்ணில் நின்று போர்க் கோலத்தோடுப் காட்சி தந்த முருகனை, முத்துக்குமரனை, சிறுதோ உருட்டி விளையாட வா என்று அழைக்கிறார் ஸ்ரீ குமரகுருபரர். இதோ அந்தக் கவிதை:-

''போரொரோடு மடைதுறந்து உடல்திறந்து ஓடுசெம் புனலோட
ஓடிநிமிடும் புணரிப்பெருந்தானை அவுணப்படைத்தலைவர்
பூதப் படைத்தலைவர் முன்
தாரோ டவிழ்ந்திட்ட குஞ்சிக்கிமைத்திட்ட தழல்விழிக்
கெதிர்செலாத
தாளுக்கு வாள்சோர்தடக்கைக்கு நாமநும் தாலிக்கு
வேலிகொல்லுப்
பீரோடு கொங்கைக்கண் நீரோடு வெள்ளருவிபெருகக்
கடைக்கண்நிற்கும்
பெய்வளையவர்க் கோதஅவர் விழிகள்தொறும் இளம்
பேதையர்கள் கண்தொறும் எனத்
தேரோடும் ஓடுபெரும் சிலையோடும்நின்றவன் சிறுதே
ருருட்டியருளே
திருவளர வளர்கந்த புரிவளர் இளங்குமர சிறுதேருருட்டியருளே

— முத்துக்குமாரசாமிப் பிள்ளைத் தமிழ்.

# களந்தை தந்திசுரர் பதிற்றுப் பத்தந்தாதி

விடுவா யுலக நிலையாமை கண்டுமெலி வாயதற்குள் மனமே
கெடுவாய் கலக்கும் விழியா துவக்கிற் கதியே கிடைக்க
நினைப்பாய்
படுவாய் பிறப்பிற் பலகோடி காலம் வழிதீர ஒன்று பகர்வன்
கடுவார் களத்தன் சுகலிங்கன் நாமம் கருதாத தென்ன
மதியே. 74

மதியங் கிடந்த சடையான் அனேக மனமுங் கவந்த பெரியான்
விதியும் பணிந்து கிளியாக நின்று வியன்மா களந்தை நகராம்
பதியும் புனைந்து சுகலிங்க னென்று பரிநாம மோதி அரிதாங்
கதியும் பெறுங்கொ லினியெந்த நாளுங் கடையான சென்மம்
விடவே. 75

சென்மங் கடோறுஞ் சிவபுண்ணி யங்கள் திரளத் திரண்டு
விளையும்
கன்மத் துலைந்து திருநீ றணிந்து மலிதீர் களந்தை நகரிற்
தன்மம் புரிந்து சுகலிங்க நாதர் சமயங்கள் மேவி யவனுவ்
நன்மந்தி ரங்கள் செவியும் பிறப்பு நணுகாது ஞான மிகவே, 76

ஞானம் பிறந்து நயனந் திறந்து குலமும்பொ லாது மகலப்
பானந் தவிர்ந்து சிவமே யுணர்ந்து பரபோக வாழ்வு பெறலாம்
தானந் தவங்கள் மிகுதென் களந்தை தனிலே யிருந்து தமியேன்
ஈனங் களைந்த சுகலிங்க நாதர் இருதாள் நினைந்த வுடனே. 77

உடலும் தளர்ந்து நரையும் பொருந்தி ஒளியும் மழுங்கி எயிறு
விடலும் புகுந்து நமனுஞ் சினந்து விடுதூத ராலு மெலிவார்
கடல்நஞ் சயின்ற சுகலிங்கர் பாதங் கருதாது பூசை புரியத்
திடமின்றி நின்று வீணு வலைந்து திரிகின்ற மாந்தர் பலரே. 78

மாந்தர்க் கிருப்பு நிலையோ புன்மொக்குள் மறைவான மின்னல்
மனுவாம்
வேந்தர்க்கு முற்ற பெருவாழ்வு கானல் வெளிநீர்மை காண
விதியோ
சாந்தப்பு கொங்கை மடவார் நடஞ்செய் தனிமா களந்தை
யுறைபும்
ஏந்தற் புராரி சுகலிங்க நாத எனையாள வேண்டு மினியே. 79

இனியார்சொல் சென்மக் கடல்நின்று மேற்றி யிடுவார்கள்
சொல்லை எவரே
முனியாது செய்த பிழைதான் பொறுக்க முறையே களந்தை
இறைவா
தனிஞான வாரி சுகலிங்க நாத சதகோடி தேவர் தொழவும்
நனியார் பொதுக்கள் நடமாடல் செய்த நவபேத மான
சிவமே. 80

வேறு

சிவத்துவ முளைத்தெழுந்த சின்மையாதி சின்மயத்
தவக்கொழுந்து நீயலாது தானும்வேறு முள்ளதோ
அவப்ப டாமலென் னையாளும் ஐயனே களந்தைவாழ்(வு)
உவக்குமெங்கள் தத்தையீச வுண்மை கேளிஃதுண்மையே. 81

உண்மைஞான வாசகம் ஓதிஓதி உள்கிலா
வெண்மையாளர் பெற்றபேறு வேதனைப்பி றப்பலோ
கண்மெய்காது நாசிவாய் கலந்துளான் களந்தைவாழ்
அண்ணல்தத்தை யீசனர்வந் தாண்டவென்னே டொப்பரே. 82

ஒப்பிலாத வாரணசி உற்றகங்கை நீரும்வந்(து)
எப்பு நீங்கு வாவிசூ ழெழில் களந்தை யூரில்வாழ்
அப்பனன்னை எவ்வுயிர்க்கு மானதத்தை யப்பனென்
வைப்புகந்து தந்த நல்ல வாழ்வெனக்கு வாழ்வதே. 83

வாழ்வில்நின்று மதிமயங்கி வாசல்வந்த பிச்சையின்
கேள்வியின்றி நின்றிரே கெடுதிமேலு முண்டரோ
தாழ்விலாத தென்களந்தைத் தந்தையப்பர்க் கன்பிலா
ஏழைமக்க ளுய்யுமாறு எங்ஙனெங்க னெங்ஙனே. 84

எங்கள்நாத ரெம்பிரானெந்தை தந்தை எம்மனோர்
தங்கள் நாதர் தென்களந்தை தத்தையப்பர் தாள்தொழ
இங்குவாரும் வாரிரே லெமகணங்கள் கொண்டுபோய்
பங்கமான குழியினூடு பாய்ச்சநீர் பதைப்பிரே. 85

பதைக்க லாது மாந்தரைப் பாடுகின்ற பாவலீர்
கதைக்கு நாதர் தென்களந்தைக் கர்த்தர் காலன் வீழுமுன்
உதைத்த தத்தை யப்பர்தாளை உன்னுவீர்கள் உன்னவே
புதைக்க லாது திதியமாதி போகம்வீடு கூடுமே. 86

கூடுவார்கள் தென்களந்தை கூடியன்பர் தம்மொடும்
பாடுவார்கள் தத்தையப்பர் பாதமே மனத்திடை
சூடுவார்கள் கண்கள்நீர் சொரிவர் வட்டமிட்டுநின் (று)
ஆடுவார்கள் யான்பிறந்த வத்திலே கழிந்ததே. 87

கழிந்து போனநாளெல்லாம் கருதிலென்ன நெஞ்சமே
இழிந்ததல்ல மாலிடம் இனிக்கிடைப்ப தரிதுகாண்
விழிந்துதேன் பொழிந்துபாய் வயற்களந்தை வேதநூல்
மொழிந்த தத்தையப்பர்பாத முன்னுவூர்முன் முன்னுமே. 88

முன்னையொன்று பேசியே முகத்தையின்றி நெஞ்சமே
பின்னையொன்று பேசியே பிழைக்கும் வாழ்வு வாழ்வதோ
அன்னமொன்று வாவிசூழ் அகன்களந்தை ஊரில்வாழ்
மன்னர் தத்தை யப்பர்பாதம் வணங்கும் வாழ்வு வேண்டுமே. 89

வேண்டுமாறு வேண்டிலீர் வீணிலே உழைக்கிறீர்
மாண்டுமாண்டு கண்டதென்ன மானிடப் பசுக்களே
காண்டல் செய்யவந்தநங் களந்தைவாணர் வேடமே
பூண்டுநீறு பூசுவீர் புகழ்கள்சொல்லும் பேறிதே. 90

வேறு

பேறுதாசிவ கர்த்தபோற்றியென் பிழையனைத்தையு மேபொறுத் (து)
ஆறுதாழ்சடை வேணியாயெனை ஆண்டமாமணி போற்றிவென்
வீறுசேர்திரு மேனிபோற்றி நன் நீர்வளம்பெறு நீள்வயல்
சேறுசூழ்களந் தாபுரிக்கொரு தேவனேசுக நாதனே. 91

நாதமாமறை யானபோற்றி யிஞ்ஞாலவாணருந் தேவரும்
ஓதவேலையில் வந்துநாடொறும் ஓதிஓதியுளங் கனிந்திடுந்
தீதிலாகளந் தாபுரிக்குள்வளர் செல்வனேசுக லிங்கனே
பாதமாமலர் போற்றியாண்டருள் பண்பனேபர மேசனே. 92

பரகதிக்கிறை போற்றியென்பெரும் பாவநாச மகேசனே
நரகதிக்கணு காமலாண்டருள் நம்பபோற்றியுள் அன்பிலார்
புரமெரித்தவ போற்றிபோற்றியெம் புராதனுபர புண்ணியா
வரமெனக்கருள் செய்திடுஞ்சுக லிங்கனே மறைவாணனே. 93

வானுனர்கரம் ஆயிரங்கொடு வாத்தியங்கள் முழக்கவும்
சேனுளோர்கள் துதிக்கவுந்திருத் தில்லையுள்நட னப்புரி
மானுலாவுக ளந்தையூர்வரு வரதனேசுக லிங்கனே
வினைனேனையும் ஆள்வையோமழ விடையின்மேல் வருமெய்யனே. 94

மெய்யனேமலர் மேயநான்முகன் வேண்டியேசிவ பூசைசெய்
ஐயனேகளந் தாபுரிக்குளுறை ஆண்டவாவென்பு பூண்டவா
செய்யனேசி லோகனேமக தேவனேதுச லிங்கனே
கையனேனையும் ஆள்வையோகலி யாதநெஞ்சமென் கண்ணதே. 95

கண்ணனுறொரு பூவிலாமலர்க் கண்ணிடந்து பதத்திலே
நண்ணிவைத்திடு நானிலேநலச் சக்கரந்தனை ஈந்திடும்
அண்ணலேகளந் தாபுரித்தலத் தப்பனேசுக லிங்கனே
எண்ணமேயினித் தென்னைஆண்டருள் யாரெனக்குற வாவரே, 96

ஆவினங்கள்பல பல்குமாகளந் தாபுரிக்குளுறை அத்தனே
பாவினங்கள்படி மூவரோதிய பாடல்கொண்டபர மேசனே
நாவின்நஞ்சமு துண்காரண நம்பனே யமுசநாதனே
தேவினங்கள் பாதம்வேண்டிலேனின் சேவடித்தல மீவையே- 97

ஈவிலாதவர் தங்கள்பின்செல இன்சொலுஞ் சொல
வைப்பையோ
பாவகாரிகள் எய்துமாநர கெய்துமாறு படைப்பையோ
ஆவிஉன்வய மாக்கினேனினி யாதுமுன்செய லல்லவோ
மேவுமாகளந் தாபுரிக்குளுறை வேதனே யமுச நாதனே. 98

அமுதமுண்பவர் நஞ்சமுண்ண வடுக்குமோ அதுபோலவே
குமுதவல்லிமலர் வாவிசூழகளந் தாபுரிக்குளுறை கொற்றவா
கமுகுபோல்மிட றுளேயோர் புறம் காணவைத்தசுக லிங்கநின்
சமுகமீதி விருப்பதின்றியித் தரையின்மேலுறல் நீதியோ. 99

நீதியாவு மறிகிலேனுனை நினையுமன்புநிலை அறிகிலேன்
ஓதிஓதிஉணர்கி லேனெனது உள்ளமேகுடி கொள்ளுவாய்
மாதராளழ கம்மைபங்குறை வள்ளலேதமிழ் கொள்குழைக்
காதனேகந் தாபுரிக்குள்வளர் கங்கையார் சுகலிங்கனே. 100

களந்தைப் பதிற்றுப் பத்தந்தாதி முற்றும்.

## உத்தர சுவாமிமலை

டெல்லி உத்தரசுவாமிமலை நூதன திருப்பணிகளுக்குக் காணிக்கைகள் அனுப்பவேண்டிய முகவரி:—

செயலர், ஸ்ரீ சுவாமிநாதசுவாமி சிவசமாஜம்,
இராமகிருஷ்ணபுரம், புது-டெல்லி.

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழில் - சைவசித்தாந்தக் கருத்துக்கள் -

ச. தண்டபாணி தேசிகர்

அன்பு மனமலரில் ஊறுந்தேன். அதுபரமசிவத்திடமும்பாய்கிறது. நம்அன்புஅவர் மீதுபாய்ந்தபோது அவரே அன்புமயமாகிறார். இன்பம்ஆகிறார். 'இன்பமேஎன்னுடையன்பே' என்றுகண்டு காட்டுகிறார்கள் அனுபவஞானிகள். 'அன்பே சிவம்' என்பர் திருமூலர்.

நம் அன்பு நம்முடைய கண்ணுக்குக் காதிற்கு நாக்கிற்கு மூக்கிற்கு இன்பந்தருகிற பொருள்கள் மீதுபரவுகிற போதுபாசமாகி நம்மைத் தாழ்த்துகிறது; வீழ்த்துகிறது. அதுவே பரசிவத்தின் மீது பாயும்போது பக்தியாகிறது பாசவிமோசனம் பண்ணுகிறது. பரகதியளிக்கிறது. உயர்வற உயர் நலம் எதுவோ அதனை வழங்குகிறது.

அன்பு எங்கு எப்போது பாயும்? இது ஒரு சிக்கலான ஆய்வுதான். எந்தப் பொருளால் நாம் மகிழ்கிறோமோ? இன்பத்தை எய்துகிறோமோ அந்தப்பொருளின்மீது பாய்கிறது. அந்தப்பொருள் நமக்குப் பயன்படும் வகையிலும்-வரையிலும்அன்புஅதனிடம்நிலைத்திருக்கிறது. பின்பு கொஞ்சம் கொஞ்சமாகத்தேய்கிறது. அங்ஙனமன்றி, ஒருபொருள் நமக்கு எப்போதும் இன்பந் தருவதாய் - வாழ்விலும் தாழ்விலும் துணைநின்று கை கொடுப்பதாய் - நம்மிடமிருந்து ஒருசிறுபயனைக்கூட எதிர்நோக்காததாய் இருக்குமாயின் அப்பொருளின் மீது அன்புதானே பாயும். நிலைத்தும் இருக்கும். அத்தகைய அன்பை நமக்கு உதவுவன தோத்திரங்கள்.

தோத்திரங்கள் இறைவன் நமக்குச் செய்துவரும் உதவிகளையுணர்த்துவன. அதனால் நீங்காத நிலைகுலையாத பேரன்பைப் பெருமான் மீது செலுத்தத் துணை செய்வன அத்தகையதோத்திரங்கள் எத்தனையோ பிள்ளைத்தமிழ்களாக - அந்தாதிகளாக - சதகங்களாக-மாலைகளாக-பதிகங்களாக கலம்பகங்களாகத் தோன்றியுள்ளன. அவற்றுள் ஒன்று தவராசசிங்கயாய்-ஔரங்கசீப் என்னும் மகமதிய மன்னன் பேரவையில் உயிர்ச் சிங்கத்தின் மீது ஏறிச் செலுத்திய குமரகுருபரசுவாமிகள் அருளிய முத்துக்குமர சாமிப்பிள்ளைத்தமிழ். சுவாமிகளின் நூல்கள் யாவும் தோத்திர வாயிலாகச் சாத்திரங்களை அனுபவிக்கச் செய்வன.

தோத்திரங்களில் தோய்ந்த மனம் சாத்திரங்களாகிய அனுப வத்தைப் பெருமலிடுக்க இய லாது. அதிலும் பழுத்த துறவி யாகிய குமரகுருபர சுவாமிகள் பரசிவம் தமது அருளிச்செயல்கள் வாயிலாக அன்பெனும் நலத்தார் பூட்டித் திருவடி நெடுங்கரை சேர்க்கும் பேருபகாரத்தைப் பிர பந்தங்கள் வாயிலாகத் தமிழுல கிற்குத்தளராது வழங்கி வருகிருர் கள். அத்துறையில் வளர்வனவே பிரபந்தங்களாகிய சிற்றிலக்கியங் கள். அவற்றுள், தமது ஞான தினத்தின் தலைசிறந்த சிவப்பண் ணையாய்- உபாசனுமூர்த்தியின் உறைவிடமாய் விளங்கும் வேளூ ரில் தனித்ததோர் பற்றுக்கொண் டவர்கள் சுவாமிகள். ஆதலால் வேளூர் முத்துக்குமாரக்கடவுளின் பிள்ளைப் பருவ நிகழ்ச்சிகளைக் கருத்துக் கண்ணுற்கண்டு, அதில் ஈடுபட்டுக் கண்ட அருளனுபவங் களை நம்மையும் அனுபவிக்கச் செய்கிருர்கள். அவ்வனுபவங் களை முடிந்தவரை இந்த ஆண்டு வைகாசி அமரபக்கத் திருதியைத் திருநாளில் தொகுத்துத் தருக என்பது ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜ மான் சுவாமிகள்அவர்களின் திரு வருளாணை. ஆதலால் பிள்ளைத் தமிழாய தோத்திர நூலிலே சாத்திர நுணுக்கங்கள் சிலவற் றைக் காண்போம்.

இறங்கு துறையிலேயே ஒரரு மையான முத்து. பிள்ளைத் தமி ழின் நுழைவாயில் கணபதி காப்பு. அதிலேயே, ''முருகனைப் பரவு கொழி தமிழ்க் கவிதை தழையக் குஞ்சரக் கன்றின் இருசரணத்தை அஞ்சலி செய்வோம்'' என்கிருர் கள். இச்செய்யுளிலே வழிந்தோ டும் வரலாற்றுத் தேறலிலேயே சாத்திரத் தெள்ளமுதம் கலந் திருக்கிறது. புராணங்கள் யாவும் சாத்திரங்களுக்கு ''உபபிருங் கணங்கள்'' என்பது மிகப்பழை மையான மரபு. உபபிருங்கணங் கள் என்ருல் உண்மைகளை விளக் கும் உதவி நூல்கள். ஆதலால் இதில் அமைந்துள்ள வரலாறே சாத்திர நுணுக்கத்தைச் சாற்று கிறது.

இமயமலைச் சாரலிலே ஒரு பெண் யானை பிறந்து வளர்ந்து வந்தது; அது கயிலை மலையிலே வாழ்ந்து வந்த ஒராண்யானையை மணந்தது அதனல் 'சிறிய கண் களையும் பெரிய காதுகளையும் உடைய குட்டியைப் பெற்றதாம். அந்த யானைக்குட்டிதான் விநாய கக் கடவுள். அவருடைய தாள் களைப் பணிவோம்; பிள்ளைக்கவி தழையும் என்கிருர்கள். இதில் என்ன வியப்பு இருக்கிறது? பனி மலைபிடி வெள்ளிமலைக்களிற்றைக் கூடியது குட்டியைப் பெற்றது' எனலாம். ஆம்; உண்மைதான். ஊன்றிப்பார்த்தால் வியப்பு இருக்கத்தான் செய்கிறது.

'மந்தரம்' என்பது வரலாற்றுப் பெருமை படைத்த ஒரு மலை. அதிலே ஒரு சித்திரச்சாலை; அதா வது ஓவியக்கூடம். அதில் அழகழ கான ஆயிரக்கணக்கான ஓவியங் கள். அக்கலைக் கூடத்தில் ஒரு மைய மண்டபம். அதில் 'ஓம்' என்ற பிரணவம் மிகப்பெரிய உருவமாகத் தீட்டப் பெற்றிருந் தது.

ஒரு நாள் சிவபெருமானும் உமாதேவியாரும் கலைக்கூடத் தைக் கண்ணுற்றுக்கொண்டே உலாவந்தனர். சமஷ்டி நிலையில்

அதாவது கூடிய நிலையில் இருந்த பிரணவம் அ+உ+ம்+நாதம்+ விந்து என்ற ஐந்தாக அதாவது வியஷ்டி நிலையில் தோன்றியது. அதுவும் வெறும் எழுத்துக்களாகத் தோன்றவில்லை. அகாரம் காணுகின்ற சிவமாகவும், உகாரம் சிவத்தையும் படைப்புத் தொழிலில் ஈடுபடுத்துகிற அதாவது சிருட்டியுன்முகமாக்குகிற சக்தியாகவும், மகாரம் படைப்புக்கு உபாதான காரணமான அதாவது முதற்காரணமான மாயையாகவும், நாதவிந்துக்கள் இவற்றின் ஒளியும் ஒலியுமான கூறுகளாகவும் தோன்றின. இதனைக் கண்ணுற்றருளிய எல்லாம் வல்ல சித்தராகிய சிவபரம்பொருள் வியட்டிப்பிரணவத்தின் முதலில் உள்ள அகார - உகாரங்களாகிய அறிவுருவப் பொருளிரண்டும் (சித்து இரண்டும்) ஆண்யானையும் பெண்யானையுமாகத் திருவுளம் பாலித்தனர். சொல்லப்போனால் அவர்களே ஈருருவாயினர், அவர்களுடைய திருவுளக் குறிப்பின் வண்ணம் (சங்கற்ப மாத்திரையான்) சமட்டிப்பிரணவ வடிவான முகத்தையுடைய விநாயகப் பெருமான் தோன்றினார். இதில் என்ன வியப்பு என்றால், உலகப் படைப்பிற்கு மாயையை முதற்காரணமாகவும், சத்தியைத் துணைக்காரணமாகவும், தான் நிமித்தகாரணனாகவும் இருந்து படைக்கின்ற இறைவன் தானும் தன்னாற்றலுமேகூடி மாயையின்றி விநாயகரைத் தோற்றுவித்தனர்.* அதுவேசத்தி தத்வமாகிய விந்துவும், சிவதத்துவமாகிய நாதமுமாக இணைந்து ஒளியும் ஒலியும் உடையதாக விளங்கியது என்பதாம்.

இலிங்க புராணத்தில் (சர் 85 - சுலோக, 84-89) சிவபெருமான் உமாதேவியைப் பார்த்துக்கொள்வதாக

''அகார-உகார-மகாரம்,
மதியே பிரணவே ஸ்திதம்
உகாரஞ்ச மகாரஞ்ச
அகாரஞ்ச க்ரமேணது
த்வதீயம் ப்ரணவம் வித்தி;
த்ரிமாத்ரம் புறுதம்
உத்தமம்

அகார + உகார + மகாரங்கள் கூடிய ஓம் என்பது என் பிரணவம். உகார + மகார + அகாரங்கள் கூடிய 'உமா' என்னும் பிரணவம் உனக்குரியதுஎன்றபுராண வசனம் சிவசத்திகளின் இணைப்பே பிரணவம் அதன் விளைவே விநாயகர் என்ற உண்மையை உணர்த்துவன. ஆகவே,

---

*குறிப்பு:- மாயை சடமாதலானும், நாதவிந்துக்கள் சிவதத்துவங்களாதலின் அவை மாயாகாரியமாகிய சடமாதலானும் அவை மூன்றும் ஒழியச் சிவசக்தியுமாகிய அகார உகாரங்களே களிறாகவும் பிடியாகவும் உடுக்கொள்ளத் திருவுளம் பாலித்தனர் என்க.

''அவ்வுடன் உவ்வும் மவ்வும்
மனம்புத்தி அகாரங்கள்
செவ்விய விந்துநாதம்
சித்தமோ டுள்ளமாகும்
ஒவ்வெனும் எழுத்தாம்,
ஐந்தும் உணர்வுதித்
தொடுங்குமாறும்
பவ்வமுந் திரையும் போலும்
பார்க்கிலிப் பண்பு
தோன்றும்

(சித்-4-1:3) என்பதால் உணர்த்தப் பெறும் அந்தக்கரணங்கள் தாமாகக்காரியப்படுவன அல்ல; அவற்யையும் இந்த ஐந்தக்கரங்களின் அதிதெய்வமாகிய சிவம் சத்தி முதலியவைகளே இயக்குகின்றன. ஆதலால் கூடிய நிலையில் விளங்கும் பிரணவ முகத்தையுடைய பெருமான் அருள 'என்கொழிதமிழ்க்கவிதழையும்' என்ற சாத்திர நுணுக்கம் அமையும் வண்ணம் கற்பனைத் தேனில் குழைத்து கடுத்து மருந்தையடுத்துகிறார்கள்.

பொன்பூத்த குடுமிப் பொலங்குவட் டிமவான்
பொருப்பிற் பிறந்து தவளப்
பொழிநிலவு தவழுமுழு வெள்ளிவே தண்டத்தொர்
போர்க்களிற் றைப் புணர்ந்து
தென்பூத்த பாட்டளி துதைந்த பைங் கூந்தற்
செழும்பிடி பயந்தளித்த
சிறுகட் பெருஞ் செவிக் குஞ்சரக் கன்றினிடு
செஞ்சரணை யஞ்சலிப்பாம்
மின்பூத்த சிற்றிடைப் பேரமர்க் கட்கடவுள்
வேழங் கடம்படுபடா
வெம்முலைக் கோடு கொண்டு முதுமு துழக்கைமுகை
விண்டுதண் டேன்றுளிக்கும்
கொன்பூத்த தெரியற் கடம்பணி தடம்புயக்
குருசிலைப் பொருசிலைக்கைக்
குமரனைக் கந்தபுரி முருகனைப் பரவுமென்
கொழிதமிழ்க் கவிதழையவே.

பொலன்குவடு-பொன்னிறமான உச்சி, தவளம்-வெண்மை, வேதண்டம்-மலை, போகக்களிறு என்றது சிவபெருமானை, தென்பூத்த கூந்தல் எனக்கூட்டி அழகிய கூந்தல் எனலுமாம், தென்பூத்த பாட்டு எனக் கூட்டிப் பொருள் கோடலுமாம். தென்-அழகு, பிடி-பெண்யானை, செஞ்சரண் என்றது விநாயகர் திருமேனி செந்நிறம் உடையதாதலின், அமுதாம்பிகை பிள்ளைத் தமிழிலும், கருமுகிலத்து வரும் பெருமானை கருங்கொண்டல் சுமந்துவரும் செங்கொண்டல்போலும் ''கருமுழகத்தாதிப்பிரான்'' எனல காண்க. கடவுள் வேழம்-தெய்வயானையம்மையார். கடம்படு ...முலை-குடத்தை ஒத்த அல்லது அழகால் குடமானது தோற்ற நகில் என்க, கொன் - பெருமை தெரியல்-மாலை.

# " மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் "

திரு. ந. ரா. முருகவேள், M. A., M.O.L.,

திருஞானசம்பந்தர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்களுள், 'மண்ணில் நல்லவண்ணம் வாழலாம்' என்பது, அனைவரும் அறிந்ததொன்று. எனினும், இப்பாடல் சம்பந்தரால் எங்கே பாடப்பெற்றது என வினவினுல், நம்மில் பெரும்பாலோர் 'கழுமலம்' என அப்பாடலில் வருவதைக் கொண்டு, அது சீர்காழியில் பாடப்பெற்றது எனவே விடை கூறுவர். ஆனுல் சேக்கிழார் பெருமானே, அது மதுரையில் இருந்தபோது பாடியது என்று பெரிய புராணத்தில் குறிப்பிட்டருளியிருக்கின்ருர். அங்ஙனம் அவர் நுனித்தறிந்து உணர்ந்து பாடுதற்குக் காரணம், 'பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே' என்னும் வரியின் ஈற்றிலுள்ள ஏகாரத்தின் நுண்பொருட்குறிப்பே யாகும்.

'' தேற்றம் வினவே பிரிநிலை
எண்ணே
ஈற்றசை எனஐந்து ஏகா
ரம்மே ''

என்பது தொல்காப்பியம். இதனேடு 'இசை நிறை' என்ற ஒன்றையும் சேர்த்து, ஏகாரப் பொருள்கள் ஆறு என்று; நன்னூல் இயற்றிய பவணந்தி முனிவர் கூறுவர்.

'அவர்களுள் இவனேநல்லவன்' என்பது பிரிநிலை. 'நீயே இங்ஙனம் கூறினுய்?' என்பது வினு.'இவனே அதனை எடுத்தான்' என்பது தேற்றம் 'என்றும் ஏத்தித் தொழுவோம் யாமே' என்பது ஈற்றசை, 'நிலனே நீரே தீயே வளியே விசும்பே' என்பது எண். 'ஏயே இவள் ஒருத்தி பேடியோ' என்பது இசை நிறை. ஏகார இடைச்சொல் குறிக்கும் இந்த ஆறுவகைப் பொருள்களுள், 'பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததே' என்னும் வரியின் இறுதியில் உள்ள ஏகாரம், ஈற்றசை (பொருளில்லாதது) என்றே, நாமெல்லாம் பெரும்பாலும் கொள்வோம். ஆனுல், சேக்கிழார் சுவாமிகளோ திருவருளின் துணையால், அது வேறு பொருள் குறிப்பது என உணர்ந்துகொண்டு நமக்கும் விளக்கிக் காட்டி யருளுகின்ருர்.

திருஞானசம்பந்தப்பெருமான் பாண்டிநாட்டில் சிவநெறியைச் செழிப்பித்துத் திருநீற்ருெளி பரப்பி, மங்கையர்க்கரசியாரும்

குலச்சிறையாரும் மகிழ்ந்து வணங்க, மதுரையின்கண் அரச விருந்தினராகச் சிலநாள் தங்கி யிருந்தார்.

அப்போது தம் அருமைப் புதல் வரின் பிரிவைத் தாங்கலாற்ருத சிவபாத இருதயர், அவரைக் காணுதற்குக் கழிபெரு வேட்கை மீதூர்ந்து, பாண்டிநாடுநோக்கிப் புறப்பட்டு, மதுரையைச் சென்று அடைந்தார். மதுரையில் திரு ஞானசம்பந்தர் தங்கியிருந்த திரு மடத்தை வினவித் தெரிந்து கொண்டு, அதனைத் தேடியடைந் தார். அங்கிருந்த அன்பர்கள் அவரை வணங்கி வரவேற்றனர். திருஞானசப்பந்தர்பால் ஓடிச் சென்று 'அப்பா எழுந்தருளினுர்' என்று மகிழ்ச்சியுடன் அறிவித்த னர். 'அப்பா' (தந்தையார்) என்ற அளவில், சம்பந்தர் சிவ பெருமானையே நினைவு கூர்ந்தார். ஆதலின 'எப்பொழுது வந்தரு ளிற்று?' என வினவிக்கொண்டு எதிர் எழுந்தருளினுர். ஆனுல், அப்பொழுது அவர்முன் சிவபாத இருதயர் தாம் சென்றணைந்தார். அந்நிலையில், சம்பந்தர் அவரை எதிர்தொழுது மகிழ்ந்தார்.

எனினும், உலகியற் றந்தை யைக் கண்ட திருஞானசப்பந்த ருக்குச் சிவபெருமான் ஆகிய தம்முடைய அருளியல் தந்தை யின் நினைவே மேலோங்கி நின் றது. ஏனைய உயிர்கட்கெல்லாம் பொதுவாக அம்மையப்பனுய் விளங்கும் இறைவன், திருஞான சம்பந்தர் திறத்தில் உண்மையி லேயே அம்மையப்பனுய் எழுந் தருளி, இளங்குழவிப் பருவத்திற் ருனே அவரை ஆண்டுகொண்டு தண்ணளி புரிந்தனன் ஆதலின், அத்தகைய அம்மையப்பரின் நலத்தை வினவியறிய அவருள் ளம் விழைந்தது. அம்மன எழுச் சியால், சம்பந்தர் சிவபாத இருதயரை நோக்கி,

"அருந்தவத்திர்; எனையறியாப்
பருவத்தே எடுத்தாண்ட
பெருந்தகை, எம்பெருமாட்டி
யுடன் இருந்ததே?"

எனத் திருப்பதிகம் போற்றிசைத் தார். அத்திருப்பதிகமே "மண் ணில் நல்லவண்ணம்" எனத் தொடங்குவதாகும். அத்திருப் பதிகம், இத்தகைய ஒரு பொருந் திய சூழ்நிலையிலேயே திருந்த அருளிச்செய்யப்பட்டது என்பத னைச் சேக்கிழார் பெருமான, "காலம் இடையிட்டவற்றையும், தேயம் இடையிட்டவற்றையும் காணும் ஞானக்கண் கொண்டு" திருவருள் துணையால் உணர்ந்து, நமக்கு உணர்த்தியருள்கின்ருர்.

திருஞானசம்பந்தரின் உணர் வோடு, சேக்கிழார் பெருமானின் உணர்வும் ஒன்றி இயைந்துநின்று திளைத்திருந்தாலன்றி, இச் சூழ் நிலையை அவர் இனிதுணர்ந்திருத்

தல் இயலுமோ? சேக்கிழாருக்கு இச்சூழ்நிலையின் பெற்றியுணர் தற்குப் பெரிதும் உதவியது ''பெருந்தகை இருந்ததே?'' என வரும் ஈற்றடியில் உள்ள ஏகார மேயாகும். நம்போன்றோர் அவ்வேகாரத்தினை ''ஈற்றசை'' என்றோ, 'பிற' என்றோ எளிதாக எண்ணி, எள்ளித் தள்ளிவிடுவோம். ஆனால், சேக்கிழார்பெருமான் தேவாரத் திருப்பாடல்களின் ஒருசிறு எழுத்தினையும் பொருளற்றதெனப் புறக்கணிக்க உள்ளம் ஒருப்படுவரோ? சேக்கிழார் அவ்வேகாரத்தினை வினப் பொருள் குறித்ததென நுண்ணிதின் எண்ணியுணர்ந்தார்.

''மண்ணில் நல்ல என்றெடுத்து,
மனத்தெழுந்த பெருமகிழ்ச்சி
உண்ணிறைந்த காதலினற்
கண்ணருவி பாய்ந்தொழுக,
அண்ணலார் தமைவினவித்
திருப்பதிகம்அருள் செய்தார்
தண்ணறும்பூஞ் செங்கமலத்
தார்அணிந்த தமிழ்விரகர்''

எனத்தாம் நுண்ணிதின் எண்ணியுணர்ந்த செம்பொருளைச் சேக்கிழார்சுவாமிகள், நாமும்உணர்ந்து மகிழ விளக்கியிருத்தல் காணலாம்.

இச்செய்யுளின்கண் ''அண்ணலார் தமை வினவித் திருப்பதிகம் அருள்செய்தார்'' எனவரும் வரியில் அமைந்துள்ள வினவி என்னும் ஒரு சொல்லே மிகவும் உயிர்ப்புடையதாய், அத் திருப்பதிகத்தின் கருத்து முழுவதையும் சுருக்கித் தொகுத்துத் திரட்டியுணர்த்தி நிற்கின்றது. இங்ஙனம் இங்கு ஏகாரம் வினப்பொருள் உணர்த்தி வந்தது என்பதனைக் குறிப்பதற்கு, வினவி என்னும் ஒரு சொல்லைப்பெய்து பொருளைத் தெளிவுபடுத்தி அருளிய சேக்கிழார் பெருமானின் அடுமைப்பாடு, அனைவரும் வியக்கத் தகுவது ஆகும்!



## இதமான வாழ்வுக்கு எளியவழிகள்

(அ) படர்தாமரைக்கு

பொன்னுவாரை வேருடன் சந்தனம் கூட்டி அரைத்து படர் தாமரையில் தடவி வந்தால் படை உதிர்ந்து போகும்.

(ஆ) தொண்டை கம்மலுக்கு

கற்பூர வல்லி சாற்றில் கற்கண்டு தூள் சிறிது சேர்த்து சாப்பிட தொண்டை கம்மல் நிவர்த்தியாகும்.

(இ) கண் இமை வீக்கம்

பன்னீரை 2 துளிகள் கண்களில் விட்டு, பசுவின்பாலை காய்ச்சி சுடசுட ஒரு துணியில் நனைத்து கண்களில் ஒத்தடம் கொடுக்க, கண் இமை வீக்கம் குணமாகும்.

— டாக்டர். N, சடையப்பன், S. M: P.

# சிரிப்பும் - சிவபெருமானும்

சிவமணி புலவர் **திரு. ம. சிவசம்பு** பி. லிட்,

தில்லையில் கூத்தப்பெருமான் கற்பனை கடந்த சோதியாகக் கருணையே உருவமாக அற்புதக் கோலமாக அருட்காட்சி வழங்கிக் கொண்டிருக்கிறன். அங்குத் திருநாவுக்கரசு சுவாமிகள் சென்றூர். அவர் குனித்த புருவத்தையும் கொவ்வைச் செவ்வாயில் குமிண் சிரிப்பையும் பவளம்போல் மேனியில் வெண்ணிற்றையும் இனித்த முடைய எடுத்த பொற் பாதத்தையும் கண்டார். இறைவன் என்று வந்தாய்? என்று கேட்டான். குமிண் சிரிப்பில் நெஞ்சைப் பறிகொடுத்த அவர் மனித்தப்பிறவி வேண்டும். இக் காட்சி காண மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே என்று வேண்டினூர்.

குனித்த புருவமும் கொவ்வைச்
செவ்
வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற்
பாதமும் காணப் பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
இந்த மாநிலத்தே

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகளும் தில்லை சென்றூர். கூத்தப்பெருமானைத் தெரிசித்தார், கூத்தப்பெருமான் புன்முறுவலுடன் அடிகளாரை நோக்கினுன். அடிகளாரும் வந்த பேரின்ப வெள்ளத்துள் திளைத்து மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார். இறைவன் பூத்த புன்முறுவல் சிந்தைக்கு இன்ப விருந்தாக இருந்தது. 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற முறையில் அக்காட்சியை நமக்கும் கூறுகிறூர் அடிகளார்.

சிவபெருமான் பரசு, பினுகம், சூலம் முதலியவற்றைத் திருக் கரத்தில் சுமந்து கொண்டிருக்கிறூர். அவற்ருல் அவருக்குப் பயன் ஏதாவது உண்டா? அவைகளை அவர் எப்பொழுதாவது பயன்படுத்தி இருக்கிறூரா? இல்லையே. [சிதம்பரச் செய்யுட் கோவை 501 ] முன்பு மன்மதனைத் தகனம் செய்தார், அதற்கு அவர் நெற்றிக் கண்தான்பயன்பட்டது. பிரமன் தலையைக் கொய்தார், அதற்கு அவர் கைந்நகம்தான் பயன்பட்டது. யமனை உதைத்தார், அதற்கு அவருடைய திருவடிதான் பயன்பட்டது. திரிபுர தகனம் செய்தார் அதற்கு அவருடைய சிரிப்புத்தான் பயன் பட்டது.

தில்லைவனத்தீசரே! நீர் என்ன காரியம் செய்தீர். சிரிக்கத்தான் சிரித்தீர். அந்தச் சிரிப்பை முத லிலே சிரித்திருக்கக் கூடாதா? பாம்பை நாணாக ஏற்றிப் பொன் மலையைத் தோள்நோவ வளைத் துப் பிறகு அவற்றைப் பயன்படுத் தாமற் புன்முறுவல் செய்தீரே! அது ஏன்? என்று கேட்கச்செய்து விட்டது சிவபெருமான் சிரித்த சிரிப்பு.

என்செய்தீர்? தில்லைவனத்தீசரே!
புன்முறுவல்
முன்செய்(து) எயிலைமுடியாமற்–
கொன்செய்த
பொற்புயங்க நாணேற்றிப்
பொன்மலையைத் தேவரீர்
மற்புயங்க ணோவ வளைத்து.

–சிதம்பரமும்மணிக்கோவை-27

எயில்-திரிபுரங்கள். பொற்புயங் கம்-பொலிபெற்ற பாம்பு.

---

# திருப்பணி கொள்ளும் திருநாகேச்சரம்

திருநாகேச்சரம், சேக்கிழாருக்குத் திருவடிஞானம் நல்கிய திருத்தலம்; ஆன்மார்த்த தலம்; அவரது திருப்பணி பெற்ற தலம். சம்பந்தசுவாமிகளும், அப்பரடிகளும் வழிபட்டுத் தேவாரப் பாமாலை சூட்டப்பெற்ற இத்திருத் தலத் திருக்கோயில் பல லட்சம் செலவில் திருப்பணிகள் செய்யப்பெற்றுக் கும்பாபிஷேகம் செய்விக்கப்பெறவுள்ளது.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீ-ல-ஸ்ரீ **காசிவாசி எஜமான் சுவாமிகள்** அவர்களைப் புரவலராகவும் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்களைத் தலைவராகவும் கொண்ட திருப்பணிக்குழு அமைந்துள்ளது.

மெய்யன்பர்களின் காணிக்கைகள் வரவேற்கப் படுகின்றன.

அனுப்பவேண்டிய முகவரி:— செயல் அலுவலர்,

ஸ்ரீ நாகநாத சுவாமி திருக்கோயில்,

திருநாகேச்வரம். (தஞ்சை மாவட்டம்.)

# நான்கு நெறிகள்

திருமுறைச்செம்மல், மதுரகவி நா. ம. வெள்ளைவாரணம்

முன்னுரை :

உயிர்கள் பாசங்களிலிருந்து நீங்கி இறைவனைச் சேர்ந்து பேரின்பம் நுகர்வதற்கு வாயிலாக நான்கு நெறிகள் உள்ளன. அவை சரியை கிரியை யோகம் ஞானம் என்று கூறப்படும். இவற்றைத் தாசமார்க்கம், புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்ற பெயர்களாலும் சிலர் குறிப்பார்கள். இந்நெறிகளில் ஒழுகியோர் முறையே சாலோகம் சாமீபம் சாரூபம் சாயுச்சியம் என்ற பேறுகளைப் பெறுவார்கள் என்று ஆகமங்கள் கூறுகின்றன.

சரியை :

இந்நெறி இறைவனுக்கு அகம் படிமைத்தொண்டு செய்யும் நெறியாகும். அதனால் இதனைத் தாசமார்க்கம் என்பர். (தாசன்–அடிமை) சரியை நெறியானது திருநீறு உருத்திராக்கம் என்பவற்றை அணிதலும், மலரும் பச்சிலையும் தரத்தக்கனவாகிய நந்தவனங்களை அமைத்துப் பாதுகாத்தலும், மலர் பறித்தலும், மலர்களை மாலையாகத் தொடுத்துக் கொடுத்தலும், நாடோறும் திருக்கோயிலுக்குச் சென்று மெல்லிய துடைப்பத்தால் திருவலகிடுதலும் தூய பசுஞ்சாணத்தால் திருமெழுக்கிடுதலும் நறுநாற்றமுள்ள தூபம் இடுதலும், இருள் நீங்கத் திருவிளக்கேற்றலும், அடியார்களையும் ஆசாரியர்களையும் கண்டால் சிவனாக எண்ணி வணங்குதலும் இறைவன் சந்நிதியில் கும்பிட்டுக் கூத்தாடித் தோத்திரங்கள் பாடுதலும் திருக்கோவிலுக்கு வேண்டிய திருமஞ்சனம் திருவமுதுக்கான பொருள்களைக் கொடுத்தலும் இறைவடிவங்களைத் தியானித்தலும் இத்திருத்தொண்டின் உறைப்பினால் ஓர் அனுபவ உணர்வு பெறுதலும் பிறவும் ஆம்.

இச்சரியை நெறியில் சிலவற்றைத் திருநாவுக்கரசர், "நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப் புலர்வதன்முன் அலகிட்டு, மெழுக்குமிட்டுப் பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித் தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடி" என்று குறிப்பிட்டுள்ளார். இச்சரியைநெறியை பின்பற்றி முருக நாயனர் மலர்மாலை தொடுத்துக்

கொடுத்தார். திலகவதியார் திரு வலகிட்டு மெழுக்கும் இட்டார். குங்குலியக்கலயர் தூபமிட்டார். நமிநந்தியடிகள் திருவிளக்கேற்றினர். மூர்த்தி நாயனர் சந்தனம் அரைத்துக் கொடுத்தார். அரிவாட்டாயர் திருவமுதுக்காகச் செந்நெல் மாவடு செங்கீரை கொடுத்து வந்தார். சரியை நெறிக்கு முற்றும் சிறந்த எடுத்துக் காட்டாகத் திருநாவுக்கரசரைக் குறிப்பிடுவது மரபாகும்.

கிரியை :

இந்நெறி இறைவனது திருமேனியைத் தொட்டுச் செய்யும் சிவபூசையாகும். இது மகனெருவன் தனது தந்தையின் மேனியைத் தொட்டு அவருக்குச் சகல உபசாரங்களும் செய்யும் செய்கையோடு ஒத்திருப்பதால் இதனைப் புத்திர மார்க்கம் என்பர். கிரியை நெறியானது உளத்தூய்மையும் புறத்தூய்மையும் உடையவராய்த் திருநீறு உருத்திராக்கம் என்பவற்றை அணிந்து சிவபூசைக்கு வேண்டிய நீர், மலர், தூபம், விளக்கு, திருமஞ்சனப் பொருள்கள், திருவமுது முதலியவற்றைத் திரட்டி ஆகமவிதிப்படி திருமஞ்சனம் அலங்காரம் ஆராதனைகளைச் செய்து அருச்சித்து தோத்திரம் சொல்லிப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்காரம் பண்ணி பூசை முடித்தலும் அப்பூசையின் உறைப்பினல் ஓர் அனுபவ உணர்வு பெறுதலும் பிறவுமாம். சண்டேஸ்வரர், திருநீலநக்கர், புகழ்த்துணையார் முதலியோர் கிரியை நெறியில் நின்றவராவர். இந்நெறிக்கு முற்றும் சிறந்த எடுத்துக் காட்டாகத் திருஞான சம்பந்தரைக் குறிப்பிடுவது மரபாகும்.

யோகம் :

இந்நெறி இறைவனும் தானும் வேறு என்ற நினைவு ஒழிந்து ஒன்றித்து நிற்பதாகச் சிந்திக்கும் தியான நிலையாகும். இது தோழர்கள் இருவர் தம்முள் வேற்றுமை ஒழிந்து ஒருமனத்தினராக வாழும் செய்கையோடு ஒத்திருப்பதால்இதனைச் சகமார்க்கம் என்பர். (சகன்–தோழன்).

யோகநெறியானது இயமம் நியமம் ஆசனம் பிராணயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம் சமாதி என்ற எட்டையும் கடைப்பிடித்தலாகும். இவற்றுள் இயமம் என்பது கொல்லாமை முதலிய பத்துக் குணங்களை உடையவராக இருத்தலாகும். நியமம் என்பது தலம் முதவிய பத்து நியதிகளை உடையவராக இருத்தலாகும். ஆசனம் என்பது தியானிப்பதற்காகச் சுகாசனம் முதலியவற்றில் ஒன்றில் அமர்தலாகும். பிராணயாமம் என்பது பிராணவாயுவை அடக்குதலாகும். பிரத்தியாகாரம் என்பது மனத்தைப் புறத்தே செல்லவிடாமல் தடுத்தலாகும். தாரணை

என்பது மனத்தைச் சுழுமுனை நாடியில் செலுத்துதலாகும், தியானம் என்பது மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆக்ஞை என்னும் ஆறு ஆதாரங்களையும் அவற்றின் அதிதெய்வங்களையும் அறிந்து பிரமரந்திரத்தில் பரப்பிரம்மத்தைத்தியானித்தலாகும். சமாதி என்பது தியானிக்கிறேம் என்ற நினைப்பற்றுத் தானும் பிரமமும் வேறு என்ற எண்ணம் ஒழிந்து பிரம்மத்தோடு ஒன்றி விடுதலாகும். இந்த எட்டு நிலையையும் திருமூலர் அட்டாங்க யோகம் என்பார். திருமூலர் பெருமிழலைக்குறும்பர் முதலியோர் யோக நெறியில் நின்றவராவர். இந்நெறிக்கு முற்றும் சிறந்த எடுத்துக்காட்டாகச் சுந்தரமூர்த்தி சுவாமிகளைக் குறிப்பிடுவது மரபாகும்.

ஞானம் :

இந்நெறியானது பதி பசுபாசம் என்பவற்றின் உண்மைகளை ஞானசாரியரிடம் கேட்டறிதலாகும். இது ஆசாரியனிடத்தில் ஞானசாத்திரங்களைக் கேட்டல். கேட்டதனைச் சிந்தித்தல். சிந்தனையின் பயனைத் தெளிதல், தெளிந்த முறையில் நிட்டைகூடல் என நான்கு வகைப்படும். இந்நெறிக்கு முற்றும் சிறந்த எடுத்துக்காட்டாக மணிவாசகரைக் குறிப்பிடுவது மரபாகும்.

முடிவுரை :

நான்கு நெறிகளில் ஞான நெறியே மேலானது. ஏன் எனில் சரியை கிரியை யோகத்தால் பெறுவது முறையே சாலோகம் சாமீபம் சாரூபம் என்ற பதமுத்திகளாகும். இப்பத முத்தி பெற்றவர் ஒரோவழி மீண்டும் பிறவி எய்துவதும் உண்டு. ஞானநெறியின் பயன் சாயுச்சியமாகும். சாயுச்சியம் பெற்றவர் மீண்டும் பிறப்பதென்பதே இல்லை. இதனால் இந்நெறியை மீண்டுவாரா நெறி என்பர், ஞானமே சிறந்தது எனில் மற்ற மூன்று நெறிகளை ஏன் பின்பற்ற வேண்டும் எனில், அடும்பிலிருந்து மலரும், மலரிலிருந்து காயும், காயிலிருந்து கனியும் உண்டாவதுபோலச் சரியையிலிருந்து கிரியைக்கும் கிரியையிலிருந்து யோகத்துக்கும் யோகத்திலிருந்து ஞானத்துக்கும் வரவேண்டும் ஆகையால் சைவ சித்தாந்தம் நான்கு நெறிகளையும் வற்புறுத்துகிறது.

---

# இருபா இருபஃது

தெளிவுரை :

கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்

(தெ-ரை) வளம்குன்றாத பெண்ணையாறு பாயும் திருவெண்ணெய் நல்லூரின்கண் எழுந்தருளியிருக்கும் தலைவனே! கை, கண், தலை, வாய், கால், செவி, மூக்கு முதலிய கருவிகளுடன் கூடிய திருவுருவைக் கொண்டு அடியேனது இருவினையை வேரறப் பறித்த மெய்கண்டதேவனே! வினையின் நீங்கி விளங்கிய அறிவனே! இருண்ட மிடற்றை உடையவனே! அடியேன் அறிதற்குரிய அறிவாய் உள்ளவனே! முன்னமேயே பிணிப்புண் டிருக்கும் மும்மலங்களையும் நீக்கி அருளிய பெருமானே!

நிலைபெற்று இருக்கும் இருவினையாகிய புண்ணிய பாவங்கள் தம்மில் ஒத்த நிலையில் அடியேனிடத்துப் பிணிப்புண்டிருக்கும் மலங்களை நீர் தீக்கையினால் வேறுபடுத்தி அவ்வருளினால் அடியேனிடத்து எழுந்தருளினீராகில் உம்மோடு அடியேன் பிரிவின்றி இயைந்து இருக்கும் பேரின்பத்தைப் பெற்றிருக்கவேண்டும். அன்றியும் இவ்வருள்நிலை புரிதற்கு முன் அடியேனிடத்து நீர் இல்லாது இருக்கவும் வேண்டும். அடியேனிடத்து மும்மலங்களும் பொருந்தியிருப்பதால் நீர் அடியேனிடத்து முன்பு பொருந்தவில்லையெனில் அம்மலங்களினின்றும் நீங்கவும் நுமது செம்மலர் நோன்றாள் சேர்தலும் இன்றி அடியேன் சார்ந்து நிற்கும் பொருளுடனேயே இருந்திருத்தல் வேண்டும். பெருமையுடையவனே! இதுவே முடிவாம். அவ்வாறன்றி நின்திருவருளால் அடியேன் எடுத்த உடலுக்கு இயைய ஏன்ற வினையை நுகர்வதன்றி மேலும் உடலெடுத்தற்குரிய ஏறும் வினை உளவாகாது என்று அருளிச் செய்யின் அடியேன் நுகர்ந்து நிற்கும் ஏன்ற வினைக்கு ஈடாக உடல் நிற்கவே அதற்குக் காரணமாகிய மாயை நீங்காது. மாயை நிற்கவே கன்மமும் நீங்காது. இவ்விரண்டும் உளவாகவே ஆணவமும் உண்டெனக் கருதப்படும். இவ்வாறு மும்மலங்களும் உளவாகவே ஏறும் வினையோடு இயைந்து நிற்கும் மாயையின் விளைவாய் உள்ள உடலும், அதன் வழிப் பற்றும் விடாமல் மேன்மேலும் வளரும். அன்றியும் இருவினை ஒப்பு

ஏற்பட்டாலன்றி நும்மை அடைய இயலாது என்னும் பண்டைய அறமும் பொருந்தாதாகும். ஆதலின் அடியேனிடத்து நீர் கூடி நிற்கின்றீர் எனக் கூறுவனே? அன்றி கூடி நின்றதில்லை என்பனே? அம்மலங்கள் அடியேனிடத்தினின்றும் கெட்டது என்பனே? கெடாது நின்றது என்பனே? இவ்வையத்தின் நீங்கித் தெளிய அருளல் வேண்டும் என்பதாம்.

குருமூர்த்தியே! நீர் எம்மிடத்து வந்து மலநீக்கமும் அருட்பதிவும் செய்தீர் என்பதாயின் அதற்குமுன் நீர் அடியேனிடத்து இல்லா திருக்க வேண்டுமே? என்பது முதல்வினா. இறைவன் உயிரிடத்து என்றும் உயிர்க்குயிராய் விளங்குகின்றான். எனினும் ஆணவச் சேர்க்கையால் அது அப்பரம்பொருளை உணர்வதில்லை. அச்சேர்க்கை நீங்குங்கால் அது அவனை உணர்கின்றது என்பது அதற்குரிய விடையாகும். எனவே இறைவன் உயிரிடத்துள்ள மலம் பக்குவப்படுங்காறும் தோன்றாத் துணையாய் நின்று அருளுவன் என்பது பெறப்படுகிறது. இவ்வாற்றான் மலநீக்கத்திற்கும் உயிர் தாள்நிழல் சேர்தற்கும் அவ்விறைவனே காரணமாகின்றான் என்பதும் பெறப்படுகின்றது.

ஏன்ற வினை உண்டாகவே அதன் தொடர்பாகப் பழவினையும் வருவினையும் அவற்றிற்கு ஏதுவாகிய மும்மலங்களும் உளவாகுமே என்பது அடுத்த வினா. இறைவனே குருவாக வந்து அருளும் நிலையில் அவனது தீக்கை நிலையால் பழவினையும், அவனருள் வழி நிற்றலால் வருவினையும் நீங்கும். உடலோடு இயைந்து நிற்கும் ஏன்ற வினையும் திருவருள் வயப்பட்டு விருப்பு வெறுப்பு அற்ற நிலையில் எதனையும் துய்த்தலின் அதனாலாய துன்பம் அவற்கு எய்துதலில்லை என்பது அதற்குரிய விடையாகும். 'ஏன்ற வினை உடலோடு ஏகும் இடையேறும் வினை தோன்றில் அருளே சுடும்' எனத் திருவருட்பயன் கூறுவதும் காண்க.

எனவே இறைவன் உயிர்க்குயிராய் நின்று அருளுகின்றவன் என்பதும் அவனது கருணையால் மலநீக்கம் பெற்று உயிர் உய்திபெறும் என்பதும் புலனாகும். கன்மச்சமம்-இருவினையொப்பு. ஆர்ச்சன மாயையின்-பிணிப்புண்ட மாயையினால். உற்பவம்-தோற்றம்.

11. மதிநின்பால் இந்த மலத்தின்பால் நிற்க
விதியென்கொல் வெண்ணெய் வாழ்மெய்ய – பதிநின்பால்
வந்தால் இதில் வரத்துஇல் வந்து இரண்டும் பற்றுகிலேன்
எந்தாய் இரண்டாமாறு என்.

(தெ-ரை) திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருக்கும் மெய் கண்ட தேவனே! அடியேனுக்கு உரிய அறிவு உம்மால் உளதாய தாம்; அங்ஙனமிருக்கவும் இம்மலங்களோடு அடியேன் கூடியிருப் பதற்குரிய காரணம் என்ன? நும்மிடத்துக் கூடின் இம்மலங்களில் மீளவும் பற்றுதற்கில்லை மலங்களைப்பற்றின் நும்மொடு கூடு மாறில்லை. ஒரே அமயத்தில் நும்மொடும் இம்மலங்களொடும் கூட லும் இயலாது. எனவே அடியேனுக்கு நும்மொடு கூடுமாறும் இம்மலங்களோடு கூடுமாறும் எங்ஙனம்? அடுளுவாயாக என்பதாம்.

உயிர் ஒரே அமயத்தில் மலங்களொடும் இறைவனொடும் பற்றி நிற்பது எங்ஙனம் என்பது வினா. பாசி நிறைந்த குளத்தில் கல்லினை எறிகின்ற பொழுது அப்பாசி நீங்குதலும் அதன்பின் அது கூடு தலும் கண்கூடு. அதைப் போன்றே உயிர் திருவருளோடு கூடுகின்ற பொழுது இம்மலங்கள் நீங்குதலும் அதனொடு கூடாக்கால் இம் மலங்களொடு கட்டுண்டு கிடத்தலும் இயற்கையாகின்றது என்பது அதற்குரிய விடையாகும். 'பாசிபடு குட்டத்தில் கல்லினை விட்டெறி யப்படும் பொழுது நீங்கி அதுவிடும் பொழுது பரக்கும், மாசுபடு மலம் மாயை அருங்கன்மம் அனைத்தும் அரனடியை யுணரும் போது அகலும் பின் அணையும், நேசமுடன் திருவடிக்கீழ் நீங்காதே தூங் கும் நினைவுடையோர் நின்றிடுவர் நிலையது வேயாக, ஆசையொடு அங்கும் இங்குமாகி அவமருவோர் அரும் பாசம் அறுக்கும் வகை அருளின் வழியுரைப்பாம்' எனச் சித்தியார் நுவலுவதும் காண்க.

12 எண்திசை விளங்க இருட்படாம் போக்கி
முண்டக மலர்த்தி மூதறிவு அருளும்
மேதினி உதய மெய்கண்ட தேவ
கோதில் அமுத குணப் பெருங்குன்ற
எண்ணின் ஆர்தலும் அகறலும் என்னைகொல்
[1]உன்னில் துன்னி உனுவிடில் பெயர்குவை
என்னும் அதுவே நின்னியல்பு எனினே
வியங்கோ ளாளனும் ஆகி இயங்கலும்
உண்டெனப் படுவை எண்தோள் முக்கண்
யாங்கணும் பிரியாது ஓங்குநின் நிலையின்
யான்வந் தணைந்து மீள்குவன் ஆயின்
ஆற்றுத் துயர்உற்றோர் அணிநிழல் அசைஇ
வீற்று வீற்று எழுதர வேண்டலும் வெறுத்தலும்

1. உன்னில் உன்னி என்பதும் பாடம்.

இன்றிச் சாயைக்கு நன்றுமன் னியல்பே
எனையை யாகுவை நினைவடுங் காலை
இந்நிலை அதனின் ஏழையேற்கு இரங்கி
நின்னை வெளிப்படுத்து ஒளிப்பை நீயேல்
அருண் மாறுகும் பெருமஅஃது அன்றியும்
நிற்பெற் றவர்க்கும் உற்பவம் உண்டெனும்
சொற்பெறும் அஃதுஇத் தொல்லுல கில்லை
அவ்வவ் வமைவும் [1]சார்பும் அயர்வறச்
சொல்லிற் சொல்லெதிர் சொல்லாச்
சொல்லே சொல்லுக சொல் இறந்தோயே.

(தெ-ரை) எண்திசையும் விளங்குமாறு அடியேனிடத்து உளவாகும் இருள் திரையை நீக்கி அடியேனின் மனத்தாமரையையும் மலர்வித்து கால எல்லைக்கு அப்பாற்பட்ட திருவருளையும் அடியேனுக்குக் கூட்டுவித்து அருளிய இவ்வுலகில் தோன்றியருளிய ஞானக் கதிரவனே! மெய்கண்ட தேவே! குற்றம் நீங்கிய அமிர்தமாய் உள்ளவனே! குணப்பெருங்குன்றே! யாண்டும் நீக்கமற நிற்கின்ற நீர் அடியேனோடு ஓர் அமையத்துக் கூடியும், பிறிதோர் அமயத்துப் பிரிந்தும் நிற்பது எதனால்? என, நீ நினைக்கும் பொழுது கூடியும், நினையாத பொழுது நீங்கியும் நிற்போம்; அதுவே எம் இயல்பு எனில், அடியேனுக்கு ஏவல் தொழில் செய்கிறவனாய் எங்கும் நிறைந்து நிற்பவன் என்னும் நிலைக்கு மாறாக ஓரிடத்திருப்பவன் என்னும் நிலை அமையும். அன்றி எண்தோள்களையும், முக்கண்களையும் உடைய நின்னிடத்தில் அடியேன் வந்து கூடியும், பிரிந்தும் நிற்பேனாகில் வழிச் செல்வோர் வெப்பம் தாங்காத அமையத்து அழகிய குளிர்ந்த நிழலை விரும்பிச்சென்று அங்குத் தாம்வேண்டிய இடங்களில் இருந்துஇருந்து அவ்வருத்தம் தீர்ந்துழிப் போங்கால் அத்தகையோர் தன்னிடத்து வந்திருந்ததாலாய விருப்பமும் தன்னின் நீங்கினர் என்ற வெறுப்பும் நிழல் தரும் மரத்திற்கு இல்லையானாற்போல நுமக்கும் ஆகும். அன்றி அடியேனிடத்து அருள் கனிந்தபோது தோன்றியும் மீளவும் மறைந்தும் நிற்பேமெனில் அது நும் அருட்கு மாறாகும். அன்றியும் நீ நீங்கிவிடின் ஒருகால் உன்னைப் பெற்றவர்க்கும் மீண்டும் பிறப்பு உண்டு எனச் சொல்லலாகும். ஆனால் அவ்வாறு கூறல் இவ்வுலகில் இல்லை. எனவே நீ அடியேனிடத்துச் சார்ந்தும் நீங்கியும் அருளுமாற்றிற்கு மயக்கம் தீர அடுளல் வேண்டும். அவ்வாறு அருளும் விடைக்கு மேலும் வினவுமாறு இன்றி அவ்விடை அமைதல் வேண்டும்; அவ்வாறு அருளுவாயாக என்பதாம்.

---

[1]சோர்வும் என்பதும் பாடம்.

உ
செந்திலாண்டவன் துணை
திருச்சிற்றம்பலம்

# திருவிளையாடற் புராணம்

(உரை நடை)

## இரண்டாவது கூடற் காண்டம்

—o—

### 19. நான்மாடக் கூடலான படலம்

பரமசிவம்

பூதங்க ளல்ல; பொறியல்ல; வேறு புலனல்ல; உள்ள மதியின்
பேதங்க ளல்ல; இவையன்றி நின்ற பிறிதல்ல என்று பெருநூல்
வேதங்கி டந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப; கூடல் மறுகில்
பாதங்கள் நோவ வளையிந்த ஞதி பகர்வாரை ஆயு மவரே.

சிவ சத்தி

திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை இடக்கண் ஞானப்
பெருமகள் நுதற்க ணகப் பெற்றுவான் செல்வங் கல்வி
அருமைவீ(டு) அளிப்பாள் யாவள் அவள்உயிர்த் துணைவன் காண
ஒருமுலை மறைந்து நாணி ஒசிந்தபூங் கொம்பின் நின்ருள்.

வருணன் மேகங்களை மதுரையில் மழை பொழியச் செய்தல்

கடலின் தலைவனுகிய வருணன் தன் செயல் தவறினமையால் நாணுதலுற்ற மானமும் வலியுங்கொண்டு இரண்டு கண்களும் சிவப்பக் கோபாக்கினி பற்றிட உடல் கருகிக் கடலும் ஆறும் வெந்து வற்ற வெகுண்டு நின்று மதுரைப் பதியில் எழுந்தருளிய சோம சுந்தரக்கடவுளின் திருவிளையாடலைத்தெளியானுகி மீளவும் ஏழு மேகங்களையும் அழைத்து, "நீங்கள் கடல் வற்றியது என்று சொல்லு மாறு நீரினைக் குடித்து மேலெழுந்து இடித்து மழையினைச் பெய்து மதுரை நகர முழுதையும் விரைந்து அழிக்கக்கடவீர்கள்" என்ருன்.

மதுரையில் ஏழு மேகங்களும் மழையைப் பொழிதல்

உடனே ஏழு மேகங்களும் விரைந்து சென்று பூமி தெரியும் வண்ணம் கடல்நீர் முழுதும் வற்றும்படி நீரினை முடியக் குடித்து

உடம்பு கருகி மேலே எழுந்தன; மின்னலை வீசின; திசைகளும் வானுலகமும் செவிடுபடவும், பாதலமும் நிலவுலகமும் பிளக்கவும் பெரிய மலைகள் எட்டும் வெடிக்கவும், மேருமலை சாயவும் ஊழிக் காலத்தில் வெடிக்கும் அண்ட கடாகத்தின் ஒலிபோல ஒலித்து வலிய இடியேறுகள் விழுந்தன. அப்போது உலகினைச் சுமக்கின்ற ஆதி சேடன்தன் ஆயிரம் படங்களிலுள்ள பெரிய யானைகளும் தங்கள் தங்கள் நிலைகெட்டு நடுநடுங்கின. வெண்மையான நீறு பூக்கப்பெற்று மத்தளம்போல் படுத்த பூசனிக் காய்கள் (சாம்பற் பூசனிக் காய்கள்) போல ஆலங் கட்டிகள் (மழைத்துளிகள்) விழுந்தன. திரண்ட பளிங்குத் தூண்களைப்போல் மழைத் தாரைகள் சொரிந்தன. விண் மீன்கள் நீரில் விழுந்தனவோ என்று கூறும்படி கடலின் அலையிலே தவழ்ந்த மீன்கள் துள்ளிக் குதித்தன. ஏழு மேகங்களும் சராசரம் அனைத்தையும் சூழ்ந்து மூடின. உலகினை அழிக்கப் புகும் ஊழிக்கால உருத்திர மூர்த்தியைப்போல் ஆகாயமும் பூமியும் திசைகளும் தெரியாவண்ணம் பரவி இருளைத் தோற்றுவித்தன. பின்னர் மேகங்கள் பசுமையான ஒளி வீசும் மரகதங்களையும், கரிய ஒளியினைப் பரப்பும் நீல மணிகளையும், விண்மீன்களையும் ஒத்த முத்துக்களையும் பொற்குவியல்களையும், சிவந்த ஒளியினையுடைய மாணிக்க மணிகளை யும், பவளங்களையும் விஞ்சைய மகளிர்கள் தம் கணவரோடு ஊடல் கொண்டு வெறுத்து எறிகின்ற அணிகலன்கள்போல எங்கும் சிந்தின. கொடிய பெருங் காற்றும் சூழ்ந்து தாக்கி அடித்தது. மதுரை நகர் மேகங்களால் முற்றுகை இடப் பெற்றது.

### அபிடேக பாண்டியன் முதலியோர் வருந்துதல்

உலகமனைத்தையும் தனிச் செங்கோல் நடாத்திப் பாதுகாக்கும் அபிடேக பாண்டியனும், நகரத்திலுள்ள மக்கள் பலரும் இதனைக் கண்டு. "உலகம் அழியும் நாள் இதுவே" என்று மனமயங்கி வாடினார்கள். சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலை முன்னரும் உணர்ந்து கைவந்த பாண்டி மன்னன், "சிவபெருமானே இன்னமும் காத்தருளுவார்" என்று தெளிந்து நகர மக்கள் சூழ விரைந்து திருக்கோயிலை அடைந்து விண்ணிழி விமானத்தின்கீழ் எழுந்தருளி யிருக்கும் சோமசுந்தரக் கடவுளின் திருவடியில் வீழ்ந்து,

"விடையினை! ஆல முண்ட மிடற்றினை! கங்கை தாங்குஞ்
சடையினை! கூற்றை வென்ற தாளினை! மேருச் சாபப்
படையினை! அடியேம் துன்பப் பாட்டினை நீக்கி யாளும்
நடையினை யாகி எங்கள் நல்லுயிர் காத்தல் வேண்டும்"

என்று விண்ணப்பஞ் செய்தான்.

பாண்டியர்களுக்கு உண்டாகும் துன்பங்களை எப்பொழுதும் போக்கியடுளும் சோமசுந்தரக் கடவுள் நான்கு முகில்களையும் முன் போலவே நோக்கி, ''நீங்கள் மதுரைப்பதியின் நான்கு எல்லைகளை யுப் சூழ்ந்து நான்கு மாடங்களாகி ஏழு மேகங்களையும் விலக்குங்கள்'' என்று விடுத்தருளினர். உடனே அம் மேகங்கள் நான்கு மாடங் களாகி வளைந்து, நான்கு திசைகளிலும் சூழ்ந்து சந்து வாய் தெரியாவண்ணம் ஒன்றுபட்டுத்தாம் ஒரு குடிசையாகி, மாடங்களும், கோபுரங்களும், செய்குன்றுகளுமாகிய இவை தூண்களைப்போல நின்று தாங்க மதுரை நகரமுழுவதையும் மூடிக்கொண்டன.[1] அந்த நான்கு மாடங்களினுள்ளும் நகரத்தார்களும் மந்திரிமார்களும் பாண்டியனும் அவன் சேனைகளும் இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளுமாகிய பிற வுயிர்களும் தங்கி முன்னை நாளினும் இன்பக் கடலில் திளைத்து மகிழ்ந்து இருந்தனர். அவர்கள் சிவ புண்ணிய முதிர்ச்சியால் இருவினையொப்பு முதலியன எய்தப்பெற்று இறைவன் திருவடி நிழலில் புகுந்து மகிழ்வுடன் இருப்பவரை ஒத்தனர். மலையின் உச்சியில் பெய்யும் துளிகள் உடைந்து சிதறுதல்போல் சிவ பெருமான் விடுத்த நான்கு மேகங்களால் சூழ்ந்து இயற்றப்பட்ட மாடத்தின்மேல் பெய்யும் மழைத்துளிகள் உடைந்து சிதறக் கட லானது வறண்டு போகும் வண்ணம் நீரினை முகந்து, தம் உடல் பசை வறளுமாறு பொழிந்து, வருணன் விடுத்த மேகங்கள் நாண முற்று நின்றன. அதுகண்ட வருணதேவனும் வெட்கி நின்றான்.

## வருணன் வயிற்று நோய் நீங்கப் பெற்றுப் பூசித்தல்

அங்ஙனம் நின்ற வருணன், நடுநடுங்கி மிக்க அச்சமும் நாண மும் மேலிட மானம் ஒடுங்க உள்ளத்துள்ளே ஒடு மகிழ்ச்சி வந் தெய்தப் பொற்றாமரைத் தீர்த்ததை அடைந்தான். அதனை அடை யும் முன்னரே அவனுடைய வயிற்று நோய் நீங்கிற்று. பின்பு வருணன் பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடிச் சோமசுந்தரக்

---

1. நான்கு மேகங்களும் நான்கு மாடங்களாகித் தடுத்த இடம், 'மாடக் குளக்கீழ் மதுரை' எனப் பெயர் பெறும் என்பர். இவ்வூர் மதுரைக்கு மேற்கே இருக்கின்றது. இவ்விடத்தில் ஒரு பெரிய குள மும் உள்ளது. இம் ''மாடக்குளம் பெருகினால் மதுரை பாழ்'' என்ற ஒரு பழமொழியும் உலகில் வழங்குகின்றது.

கடவுளைப் பூசிக்கக் கருதிப் பேரன்போடு தூய விபூதியும் உருத்திராட்ச மாலையும் தரித்துக் கங்கை முதலிய மாதர்கள் பசும் பொற் குடங்களிலே நறுமணங்கலந்த திருமஞ்சனங்கொண்டுவந்து தரவும், கற்பகத்தரு பனிமலர், சந்தனம், சுகந்த மணப் பொருள்கள், மணிக்கலன்கள், பொன்னுடை முதலானவற்றை எடுத்துக் கொடுக்கவும், காமதேனு [1]ஐந்து கனிகள் ஐந்து அமிர்தங்கள் ஐந்து கௌவியங்கள் திருவமுது தூபம் தீபம் முதலானவற்றை எடுத்து வழங்கவும், சோமசுந்தரக் கடவுளை விதிப்படி பூசித்து ஆயிரம் திருநாமங்களைக் கூறிக் கொண்டு ஒவ்வொரு முத்துக்களைச் சாத்தித் திருவடியை வணங்கிக் கும்பிட்டு நின்றான்.

## இறைவனும் வருணனும்

சோமசுந்தரக் கடவுள் வருணன் செய்த வழிபாட்டிற்குத் திருவுள மகிழ்ந்து, ''வருணனே! நீ வேண்டுவது யாது? சொல்'' என்று பணித்தருளினர். வருணன் விரைந்து வணங்கி, ''எந்தையே! தமியேன், மணி மந்திரம் மருந்து என்பவற்றுள் ஒன்றாலும் போக்குதற்கரிய இக் கொடிய என் வயிற்று நோய் உமது பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடுவதற்கு முன்னே நீங்கப்பெற்றேன்: வேத முதலிய கலைகளுள்ளும், காட்சி முதலிய ஏனை அளவைகளுள்ளும், நான்முகன் முதலிய தேவர்கள் செய்யும் சோதனையுள்ளும் அகப்படாத பரஞ்சோதியே! ஐயோ! ஒன்றுக்கும் பற்றாத யானும் நின்னைச் சோதிக்கத் துணிந்தேனே! அறிவிலியாகிய அடியேனிடத்து என்ன குண நலத்தினைக் கண்டு எனது நோயைத் தீர்த்தீர்! அதனால் யாது பயன் பெற்றீர்! விருப்பு வெறுப்பில்லாத பெருமானே! அடியார் செய்யும் குற்றத்தையே குணமாகக் கொள்வது உமது அருட் குணமோ?

---

1. ஐந்து கனிகள் - இவை எலுமிச்சம்பழம், நாரத்தம்பழம், தமரத்தம்பழம், குளஞ்சிப்பழம், மாதுளம்பழம் என்பன. ஐந்து அமிர்தங்கள்-இவை பால், தயிர், நெய், தேன், சருக்கரை என்ற ஐந்தும் விதிப்படி சேர்க்கப்பெற்றவை. இவற்றை ரச பஞ்சாமிர்தம் என்பர். இவற்றோடு வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழம் என்னும் மூன்றையும் கூட்டிற் பல பஞ்சாமிர்தம் எனப்படும். ஐந்து கௌவியங்கள்-இவை விதிப்படிக்கூட்டி யமைக்கப்பெற்ற பால், தயிர், நெய் கோசலம் (பசுவின் சிறுநீர்), கோமயம் (பசுவின் சாணம்) என்பன.

"வேதமுதற் கலைகாட்சி முதலளவை
விரிஞ்சன்முதல் விண்ணோர் செய்யுஞ்
சோதனையுள் அகப்படாச் சோதி! உனைச்
சோதிக்கத் துணிந்தேன்; அந்தோ!
பேதைமையே னிடத்தென்ன குணங்கண்(டு) என்
பிணிதீர்த்(து) என் பெற்றாய்? ஆசை
கோதமிலாய்! குற்றமே குணமாகக்
கொள்வதுநின் குணமோ? ஐயா!"

"இந்திரன் காலந்தாழ்த்து உம்மைப் பூசித்து அயர்ச்சியுடன் தன் நகடுக்குத் திரும்பியதும், இஃது என்னை என்று தமியேன் வினவியதும், இந்திரன் அதற்கு விடை தந்ததும், அவ்விடைக்குப்பின் தமியேன் வினவியதும், அவன் சொல்லியபடியே தமியேன் உம்மைச் சோதித்ததும் ஆகிய இவையனைத்தும் எம்பெருமானே! உமது திருவருளினால் தமியேனுடைய நோய்க்கு மருந்தாய் முடிந்தன. பெருங் கருணைக் கடலே! தமியேனுடைய வயிற்று நோயே அல்லாமல் தொன்று தொட்டுத் தமியேனுடன் மாறுபட்டுவரும் இருவினைகளும் ஆணவமலத்தின் வலியும் கெட வீட்டு நெறியையும் பெற்றுக் கொண்டேன். இனித் தமியேனுக்கு மந்திரம் எதற்கு? மணிஎதற்கு மருந்து எதற்கு? [1]உண்மையாகத் தெளிய வல்லோர்க்கு இப் பொற்றாமரைத் தீர்த்தமே பிணியனைத்தையும் தீர்ப்பதன்றோ; அடியேன் முன் செய்த பிழை இரண்டையும் பொறுத்தருளவேண்டும்" என்று பன்முறை துதித்து வணங்கிச் சில வரங்களைப் பெற்றுக் கொண்டு தன் நகரினை அடைந்தான்.

### மதுரை நான்மாடக்கூடல் எனப் பெயர்வரக்காரணம்

வருணன் விடுத்த மேகங்களைத் தடுக்கும் பொருட்டுச் சிவபெருமானது சடையினின்று நீங்கிய நான்கு மேகங்களும் மலைபோல் உயர்ந்து நான்கு மாடங்களாய்க் கூடுதலினாலே மதுரைமாநகரம் அந்நாள்தொட்டு [2]நான்மாடக்கூடல் எனப் பெயர் பெற்றது[3].

---

1. இங்கு, "மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித், தீராநோய் தீர்த்தருள வல்லான் தன்னை" எனவரும் திருநாவுக்கரசர் தேவார அடிகள் சிந்திக்கற்பாலன.

2. கன்னி, கரியமால், காளி, ஆலவாய் என்ற நான்கும் கூடியதால் நான்மாடக்கூடல் எனவும் பெயர்பெறும் என்பர்.

3. இங்கு "உம்பரு நாக ருலகந் தானு மொலிகடல் சூழ்ந்த வுலகத்தோரும், அம்புத நால்களா னீடுங் கூடல் ஆலவா யின்கண் அமர்ந்தவாறே" (திருஞானசம்பந்தர் தேவாரம்) எனவரும் அடிகள் சிந்திக்கற்பாலன.

வன்றில் வருணன் விட்ட மாரியை விலக்க ஈசன்
மின்றிகழ் சடையி னின்று நீக்கிய மேக நான்குங்
குன்றுபோல் நிவந்து நான்கு கூடமாக் கூடலாலே
அன்றுநான் மாடக் கூடல் ஆனதால் மதுரை மூதூர்.

செய்யுள் — 26
ஆகச் செய்யுள் — 1332

## 20. எல்லாம் வல்ல சித்தரான படலம்

### சோமசுந்தரக்கடவுள் ஒரு சித்தராய்த் தோன்றிவருதல்

நவமணிகள் பதித்த முடியினைத்தரித்த அபிடேக பாண்டியனும் பாண்டியநாட்டிலுள்ளவர்களும் இம்மை மறுமைக்குரிய எல்லா நலன்களையும் அடையும்பொருட்டுக் கூடற்பதியாகிய மதுரையில் எழுந்தருளிய குணங்குறி கடந்த உருவினையுடைய சோமசுந்தரக் கடவுள் ஒரு சித்த வடிவமாகிய திருவேடங்கொண்டருள்வாராயினர்.

அப்போது அவர் வட்டமாகக் கட்டிய நீண்ட சடையாகிய சிகையும், விபூதியின்மேல் திலகம் தரித்த திருநெற்றியும், இரு குண்டலங்கள் தரித்த திருச்செவியும், படிகமாலை தரித்த திருமிடறும், பூணூல் அணிந்த திருமார்பும், திருநீற்றுப் பொக்கணம் தூக்கிய வலத்தோளும், யோகப்பட்டம் தரித்த இடத்தோளும், மழுப் படையும் இடையிடையே பொன்கட்டிய பிரம்புங்கொண்ட திருக் கைகளும் புலித்தோல் அரைஞாணும், புலித்தோல் கௌபீனமும் புலித்தோல் ஆடையும், கண்டோர் களிக்கும்வண்ணம்இறுகக்கட்டிய உதரபந்தனமும், வேதமாகிய கிண்கிணியும் சிலம்பும் தரித்துப் பாதுகை மாட்டப் பெற்ற திருவடிகளும், ஞானனந்தமாகிய தேனைப் பருகி மலர்ந்த திருப்புன்முறுவலோடு குறுவேர்வை அரும்பும் திரு முகமுமுடைய ஒடு [1]சித்த வடிவங்கொண்டு விளங்கினர்.

### சித்தமூர்த்தியின் திருவிளையாடல்

சித்த வடிவங்கொண்ட மூர்த்தியானவர் கடைவிதி, சித்திர கூடம் (தெற்றியம்பலம்), நாற்சந்தி, குளிகை (நிலாமுற்றம்) உப்பரிகை, மாளிகை, திண்ணை ஆகிய இவ்விடங்கள் தோறும்

---

1. இச்சித்தர் 'ஆக்கினைச் சித்தர்' என்ற பெயர் பெறுவர் எனத் திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம் கூறும்.

சென்று விளங்குவர்; தெற்கில் இருப்பவர்போற் காட்டி வடக்கே போயிருப்பர்; கிழக்கில் இருப்பவர்போற் காட்சி அளித்து மேற்கே போயிருப்பர்; யாவரும் தேடிக் காணுவண்ணம் இந்திரசாலம்போல் திடீர் என்று மறைவர்.

அதிதூரத்திலுள்ள மலையை மிக அருகில் உள்ளதாகச்செய்வார்; மிக அருகிலுள்ள மலையை அதிதூரத்திலே செல்லவிடுப்பார்; முதிய வரை இளைஞர் ஆக்குவார்; குதலைமொழிபேசும் சிறுவர்களை முதிய வராகக் காட்டுவார்; ஆணைப் பெண் வடிவமாக ஆக்குவார்; பெண்ணினை ஆண் வடிவமாகக் காட்டுவார்; மலடியை மகப்பேறு அடையச் செய்வார்; கூன், செவிடு, ஊமை, குருடு, முடம், ஆகிய இவற்றை யாவரும் காணப் போக்குவார்; வெள்ளி, செம்பு, இரும்பு ஈயம் ஆகிய நால்வகை உலோகங்களையும் பொன்னாக்குவார்; செல்வர் மனையிலுள்ள பொருள்களையெல்லாம் வறுமையில் மிக்கோர் வீடு களில் சென்றடைச் செய்வார்; நண்பர்கள் தம்முள்ளே பகைத்துப் போரிடச் செய்வார்; எட்டிமரத்தில் சுவைமிகுந்த பழங்கள்பழுக்கச் செய்வார்.

காலமல்லாத காலத்தில் வையை ஆற்றில் நீர் பெருக்கெடுத் தோடச்செய்வார்; பெருக்கெடுத்தோடும் அவ்வாற்றை மீள வற்றச் செய்வார்; இனிய சுவை அமைந்த ஓடை நீரையும், பொய்கை நீரையும் உவர் நீராக்குவார்; கடல் நீரை நன்னீராக்குவார்; மாத் திரைக்கோலை விண்ணிலே வீசி நிறுத்தி அதன்மேல் ஊசியை நாட்டி அவ்வூசியின்மேல் காற்பெருவிரலை ஊன்றி ஆடுவார்; அவ் வூசியின் மேலே தலையினைவைத்துத் திருவடித் தாமரைகளை மேலே தூக்கியவண்ணம் சுழன்று ஆடுவார்; ஆகாயத்திலே கருடனைப் போலப் பறந்து மேகத்தைப்பிடித்து இடியோடு நீரைப் பிழிந்து காண் போருக்கு அதிசயம்பெறக் காட்டுவார்; மீண்டும் அம்மேகத்தை முன்போல் ஆகாயத்தில் விடுப்பார்; பகலில் தோன்றும் சூரியன் முதலிய பொருள்களை இரவில் தோன்றுமாறு செய்வார்; இரவில் தோன்றும் சந்திரன் முதலிய பொருள்களை பகற்காலத்தில் வரச் செய்வார்; நெருப்பு, நீர், காற்று, இவற்றின் வலிகெட நோக்கு வார்; மலரும், காயும், கனியும் இல்லாத நாளில் தழைத்து விளங்கச் செய்வார்.

பீளை ஒழுகும் விழியினைக்கொண்ட கிழவர்களைக் தன் கைப் பிரம்பினால் தடவிக் காளைப்பருவத்தினையுடைய ஆடவராக ஆக்கு

வார்; அவர்களுக்குத் தகுதியாக அவர்களின் முதுமைப் பருவ முடைய மனைவியர்களை இள மங்கையராக்கிக் கருப்பம் உண்டாக விபூதி அளிப்பார்; [1]ஆகருடணம் (சேய்மையிலுள்ளதை அண்மையில் வர இழுத்தல்), அதிரிச்சியம் (விழிகளுக்குப் புலப்படும் பொருளை மறையச் செய்தல்) அஞ்சனம் (மறைந்துள்ள பொருளை வெளிப் படுத்திக் காட்டல்), வசியம்(பகைவரையும் தன் வசப்படுத்தல்), வாதம் (இரும்பு முதலானவற்றைப் பொன்னுக்குதல்) வயத்தம்பம் (முதி யோரை இளையராகவும் இளையோரை முதியராகவும் செய்தல்) ஆகிய இவற்றைச் செய்வார். கல்வியில்லாதவருக்கு எல்லாக் கலைகளும் விளங்க நாவினில் விபூதியைச் சிதறுவார்; பாண்டியன் தன்காதல் மகளிரோடு விளையாடும் பூங்காவிலுள்ள தென்னை மரத்தைப் பனை மரமாகச் செய்வார்; மரங்களையும், பறவைகளையும் யானை முதலாய விலங்குகளையும் ஒன்று மற்றொன்று மாறு ஞானப்பார்வையால் பார்த் தருள்வார்; கண்ட இளையோர் நாம் பெண்ணாகப் பிறக்கவில்லையே என்று வருந்தும் வண்ணம் பேரழகோடு கூடிய ஆண்மை வடிவங் கொண்டு அமர்ந்திருப்பார்; பாதலத்திலும் பொன்னுலகத்திலும் உள்ள பொருள்களனைத்தையும் மதுரைப்பதியிலே தோன்றுமாறு செய்வார்; இவ்வாறு அளவில்லாத வித்தைகளைச் சோமசுந்தரக் கடவுள் திருவிளையாடலாகப் புரிந்து இருந்தருளினர். மதுரைப் பதியிலுள்ள மாந்தர்கள் யாவரும் சித்தமூர்த்திகள் செய்தருளும் திருவிளையாடலின்மேல் செலுத்திவைத்த கண்களையும் உள்ளத்தை யும் அடக்கி ஆள முடியாதவர்களாய்த் திகைப்புற்றுத் தத்தமக்குரிய தொழில் முயற்சிகளை மறந்திருந்தனர்.

**சித்தமூர்த்தி அரசன் முன் வர மறுத்தல்**

இந் நிகழ்ச்சியை யெல்லாம் அபிடேக பாண்டியன் ஏவலாளர் களால் அறிந்து, "அந்த வித்தக சித்த மூர்த்தியை இங்கு அழைத்து வாருங்கள்" என்று அருகே நின்ற சிலரை விடுத்தான். அவர்கள் சித்தரை அடைந்து அச்சித்தமூர்த்தியின் திருவிளையாடலை நோக்கி வியந்து தம்மை மறந்து நின்றுவிட்டனர். அவர்கள் வாராமையைக் கண்ட பாண்டியன் பின்னும் அமைச்சர்களை விடுத்தான். அமைச்சர் கள் சித்தமூர்த்தியை அடைந்து வணங்கி, "அரசன் முன் எழுந்தருள வேண்டும்" என்று பிரார்த்தித்தார்கள். அதற்குச் சித்தமூர்த்தி "எமக்கு மன்னவனால் எய்தும் பயன் யாது?" என்றுகூறி மறுத்து விட்டார்.

---

1. இங்குத் தம்பனம், மோகனம் என்னும் இரண்டையும் ஒழித்து ஆகருடணம் முதலிய ஆறையும் கூறினர்; இவை எட்டும் தாமதகுண சித்தி ஆகும்.

# திருக்கணித பஞ்சாங்கம்

தி. கி. நாராயணசாமி, கடலூர்.

ரௌத்திரி ஸ்ரீ ஐப்பசி மீ (1980 அக்டோபர் — நவம்பர்)

நாள், திதி, நட்சத்திரக் குறிப்பு (மணிக்கணக்கில்)

| தமிழ்வ | ஆங்கிலம்வ | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (17—10—80) | வெள்ளி | அஷ்டமி 21-10 | உத்திராடம் 26-53<br>காவிரி நீராடல் தொடக்கம் |
| 2 | (18—10—80) | சனி | நவமி 20-20 | திருஓணம் 26-32 |
| 3 | (19—10—80) | ஞாயிறு | தசமி 18-45 | அவிட்டம் 25-27 |
| 4 | (20—10—80) | திங்கள் | ஏகாதசி 16-26 | சதயம் 23-40 |
| 5 | (21—10—80) | செவ்வாய் | துவாதசி 13-30 | பூரட்டாதி 21-17 |
| 6 | (22—10—80) | புதன் | திரயோதசி 10-04 | உத்திரட்டாதி 18-28 |
| 7 | (23—10—80) | வியாழன் | சதுர்த்தசி 6-17<br>O பின் பௌர்ணமி 26-22 | ரேவதி 15-23 |
| 8 | (24—10—80) | வெள்ளி | பிரதமை 22-29 | அசுவனி 12-15 |
| 9 | (25—10—80) | சனி | துவிதியை 18-50 | பரணி 9-14 |
| 10 | (26—10—80) | ஞாயிறு | திரிதியை 15-36 | *கார்த்திகை 6-33<br>பின் ரோகணி 28-23 |
| 11 | (27—10—80) | திங்கள் | சதுர்த்தி 12-58 | மிருகசிரிஷம் 26-56 |
| 12 | (28—10—80) | செவ்வாய் | பஞ்சமி 11-04 | திருஆதிரை 26-15 |
| 13 | (29—10—80) | புதன் | சஷ்டி 10-00 | புனர்பூசம் 26-26 |
| 14 | (30—10—80) | வியாழன் | சப்தமி 9-49 | பூசம் 27-27 |
| 15 | (31—10—80) | வெள்ளி | அஷ்டமி 10-28 | ஆயில்யம் 29-12 |
| 16 | ( 1—11—80) | சனி | நவமி 11-52 | மகம் நாள் முழுவதும் |
| 17 | ( 2—11—80) | ஞாயிறு | தசமி 13-50 | மகம் 7-33 |
| 18 | ( 3—11—80) | திங்கள் | ஏகாதசி 16-12 | பூரம் 10-18 |
| 19 | ( 4—11—80) | செவ்வாய் | துவாதசி 18-45 | உத்திரம் 13-17 |
| 20 | ( 5—11—80) | புதன் | திரயோதசி 21-21 | அஸ்தம் 16-20<br>தீபாவளி |
| 21 | ( 6—11—80) | வியாழன் | சதுர்த்தசி 23-52 | சித்திரை 19-19 |
| 22 | ( 7—11—80) | வெள்ளி | ● அமாவாசை 26-12 | சுவாதி 22-10<br>மெய்கண்டார் நாள் |
| 23 | ( 8—11—80) | சனி | பிரதமை 28-20 | விசாகம் 24-48 |
| 24 | ( 9—11—80) | ஞாயிறு | துவிதியைநாளமுழுதும் | அனுஷம் 27-12 |
| 25 | (10—11—80) | திங்கள் | துவிதியை 6-12 | கேட்டை 29-18 |
| 26 | (11—11—80) | செவ்வாய் | திரிதியை 7-46 | மூலம்நாள்முழுவதும் |
| 27 | (12—11—80) | புதன் | சதுர்த்தி 8-58 | மூலம் 7-05 |
| 28 | (13—11—28) | வியாழன் | பஞ்சமி 9-45 | பூராடம் 8-26<br>கந்த சஷ்டி |
| 29 | (14—11—80) | வெள்ளி | சஷ்டி 10-00 | உத்திரடம் 9-18 |
| 30 | (15—11—80) | சனி | சப்தமி 9-41 | திருஓணம் 9-36<br>துலா நீராடல்நிறைவு |

சூரியன் 24-37க்கு விருச்சிகத்திற்கு வரவு

சிவ சிவ

# 'ஸ்ரீ குமர குருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின் அருளாணையின் வண்ணம் வெளிவரும்

சமய இலக்கியத் திங்கள் இதழ்

## சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 100—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 7—50 |
| ,, | (ஸ்ரீலங்கா ) | ரூ. | 10—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

## விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின்பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள்பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60—00 |
| உள் அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

முகவரி :- நிர்வாக ஆசிரியர், 'ஸ்ரீ குமரகுருபரர்'
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் அ. கு. எ. 612 504
(தஞ்சை மாவட்டம்)

---

| | | | |
|---|---|---|---|
| திருவருட்பயன் | (விளக்க உரையுடன்) | விலை ரூ. | 1—50 |
| நீதிநெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மைநெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 0—75 |
| கந்தர்கலி வெண்பா | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மை விளக்கம் | ,, | விலை ரூ. | 1—00 |
| திருவுந்தியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| கொடிக்கவியும் வினாவெண்பாவும் | ,, | விலை ரூ. | 0—75 |
| திருக்களிற்றுப்படியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | | விலை ரூ. | 3—00 |
| மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் - கருத்தரங்கக் கட்டுரைகள் | | விலை ரூ. | 3—00 |
| திருவாசகம்-ஆங்கில மொழிபெயர்ப்பு ( கோ. வன்மீகநாதன் ) | | விலை ரூ. | 15—00 |
| தொல்காப்பியம் - நன்னூல் - எழுத்ததிகாரம் (வித்துவான் க. வெள்ளைவாரணனார்.) | | விலை ரூ. | 10—00 |
| திருவருட்பயன் - நிரம்ப அழகிய தேசிகர் உரையும், திரு. க. வெள்ளைவாரணனர் எழுதிய உரை விளக்கமும் | | விலை ரூ. | 5—00 |

ஒவ்வொன்றிலும் 20 பிரதிகளுக்குக் குறையாமல்
வாங்குவோருக்கு 20% கழிவு உண்டு.

தபாற்கட்டணம் தனி. 1000 ரூபாய்க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச் செலவு இலவசம். நூல்கள் கிடைக்குமிடம்:-

நிர்வாக ஆசிரியர், 'ஸ்ரீ குமரகுருபரர்'
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள். அ. கு. எ. 612 504
(தஞ்சை மாவட்டம்)

---

ஸ்ரீகாசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி,
திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி :- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் – Pin 612 504